கணபதி துணை.

முருகக்கடவுள் துணை.

சுப்பிரமணியக்கடவுள் வரப்பிரசாதியாய்த்
திருவண்ணாமலையில் எழுந்தருளியிருந்த

# அருணகிரிநாத ஸ்வாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்புகழ்.

## முதற்பாகம்.

[ஆறு படைவீடுகள்]

இது
பல கையெழுத்துப் பிரதிருபங்களைக்கொண்டு
திருப்பாதிரிப்புலியூர்-வித்துவான்
**சிவசிதம்பர முதலியாரவர்களால்**
பரிசோதிப்பித்து
வடக்குப்பட்டு
**த. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்**
பதிப்பித்தது.

மூன்றாம் பதிப்பு.

சென்னை
பி. ஆர். ராமையர் கம்பனியில்
அச்சிடப்பெற்றது.

June, 1921.

இந்தப் பிரதியின் எண் : 1039



☞ புத்தகம் வேண்டுபவர்கள் அடியிற்கண்டவரிடம் பெற்றுக் கொள்ளலாம். பதிப்பாசிரியருடைய கையெழுத்து முத்திரை (Facsimile) உள்ள புத்தகங்களையே வாங்கவேண்டுமென்பது இதனால் எல்லோருக்குந் தெரிவிக்கப்படுகின்றது.

வ. சு. சண்முகம் பிள்ளை,
292, லிங்கசெட்டித் தெரு,
சென்னை : MADRAS.

சிவமயம்.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

☞ இம் முதற்பாகத் துள்ள திருப்புகழ்ப் பாடல்களின் பாட பேதங்களால் ஏற்பட்ட வேறு ஸ்தலங்களும் அவற்றுக்குரிய பாடல்களின் எண்களும் :—

| ஸ்தலம். | பாடலின் எண். | ஸ்தலம். | பாடலின் எண். |
|---|---|---|---|
| திருவருணை | 296 | திருமலை | [244], 279 |
| சிங்கை | 99 | †தென்றலை | 375 |
| செஞ்சி | 79 | வயலூர் | 253, 271 |
| †செம்பேடு | 370 | †வாகைநகர் | 365 |
| திருத்தணி | 127 | திருவாதவூர் | 365 |

† இவற்றினிடம் விளங்கவில்லை.

சிவமயம்.

# திருப்புகழ் முதற்பதிப்பின் முகவுரை.

சிவபெருமானுக்குத் தேவார திருவாசகங்கள் எவ்வளவு உகந்த ஸ்தோத்திரங்களா யிருக்கின்றனவோ அதுபோல முருகக்கடவுளுக்கு மிகவும் பிரியமானது திருப்புகழ் என்னும் செஞ்சொற் பிரபந்தம். இதை அச்சிடவேண்டும் என்கிற எண்ணம் எனக்கு இருபது வருஷங்களுக்கு முன் உண்டாயிற்று. அது முதற் பல இடங்களிலிருந்து பல பிரதிகளை வருவித்து ஆயிரத்திருநூறு பாடல்கள் சேகரஞ் செய்தேன். புத்தகந்தோறும் பாடல்கள் வேறுபட்டிருந்தமையால், அவைகளை யெல்லாம் பரிசோதித்து ஒழுங்கு படுத்துவது அதிக பிரயாசமாக இருந்தது. இக்காரணத்தாலும், எனக்கு அவகாச மில்லாமையாலும், இன்னும் சில காரணங்களாலும் இப்புத்தகம் வெளிவர இதுகாறும் தாமதித்தது. திருப்பாதிரிப்புலியூர்வித்துவான்-ம-ா-ா-ஸ்ரீ-சிவசிதம்பர முதலியா ரவர்கள், அதிக சிரத்தையையும் முயற்சியையும் உடையவர்களாகி என் எண்ணத்தை முடிப்பித்தார்கள். ஒவ்வொரு பிரதியிலும் பாடல்கள் அதிக பிழையாயும் ஒன்றுக்கொன்று அதிக வித்தியாசமாயும் இருந்தமையால் அவைகளைச் சீர்ப்படுத்த ஷை முதலியா ரவர்க ளெடுத்துக்கொண்ட முயற்சி அளவிறந்தது. அதற்காக நான் அவர்களுக்கு மனப்பூர்வமான வந்தனங்கள் அளிப்பதன்றி வேறே யாது கைம்மாறு அளிக்கவல்லேன்? சில புத்தகங்களிற் சில பாடல்கள் அடிகள் மாற்றப்பட்டிருந்தன. சிலவற்றிற் பொதுவான பாடல்கள் ஸ்தலங்களுக்கும், ஒரு ஸ்தலத்துக் குரியபாடல் மற்றொரு ஸ்தலத்துக்குமாகத் திருப்பப்பட்டிருந்தன. இதற்குத் திருஷ்டாந்தம்,—“ தோகைவாசி நடத்தும் பெருமாளே ”

என்பதை 'சோலைமாமலை நிற்கும் பெருமாளே" என்றும், "ஓமெழுத்தி லாறெழுத்தை யோதுவித்த பெருமாளே" என்பதை 'ஓசையுற்ற சோலை வெற்பில் ஓகைபெற்ற பெருமாளே' என்றும், "கொடுமுடிக் குமரப் பெருமாளே" என்பதை 'குருமலைக்குமரப் பெருமாளே' என்றும், "மாடையம்பதி வாழ்வே தேவர்கள் பெருமாளே" என்பதை 'மாபரங்கிரி மீதே மேவிய பெருமாளே' என்றும் வேறுபடுத்தப்பட்டிருந்தன. இன்னும் இவைபோ லுள்ள வேறுபாடுகள் மிகப்பல. இவ்வேறுபாடுகளை யெல்லாம் பிரதிகளைக்கொண்டு கூடியவரையில் நீக்கிப் பாடல்கள் சுத்தஞ்செய்யப்பட்டன. இவ்வளவு தூரம் ஆராய்ச்சிசெய்து ஒழுங்குபடுத்தியும், பாடல்களெல்லாம் அருணகிரிநாதசுவாமிகள் திருவாக்கிலிருந்து வந்தபடியே கலப்பில்லாம லிருக்கின்றனவென்று சொல்லித் துணிந்தி லன். ஓலைப்புத்தகங்கள் பலவற்றிற் பலவாறாக எழுதப் பட்டிருக்கும் பாடல்கள் இப்போது ஒருவாறு ஒழுங்காகத் திரட்டி எல்லோரும் படிப்பதற்குச் சுலபமாக ஒருபுத்தக மாக்கப் பட்டன என்று மாத்திரம் சொல்லக் கூடும். இப் புத்தகத்தில் எவ்வகைப் பிழைக ளிருந்தாலும் அவைகளை யெல்லாம் பொறுப்பதன்றி அவற்றை அடியேனுக்குத் தெரிவிக்கும்படிக்கும் கற்றுணர்ந்த பெரியோர்களை வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன். முருகபெருமா னுடைய திருவருளினால் இப்புத்தகம் இரண்டாம் பதிப் புக்கு வருமாயின் அக்காலத்தில் மேற்கண்டவழுக்களைக் களைந்துவிடலாம். எளிதிற் பொருள்விளங்கும் பொருட்டுப் பாடல்களிற் சிற்சில இடங்களிற் சந்திகள் பிரிக்கப்பட் டிருக்கின்றன. அதை ஆன்றோர் அருவருக்காமல் அங்கீ கரித்தல் வேண்டும். இது நிற்க.

சிவஸ்தலங்களுள்ளே தேவாரம்பெற்றவைகள் எப் படிச் சிறப்புற்றிருக்கின்றனவோ அதுபோல் முருக பிரானுடைய கோயில்களில் திருப்புகழ்பெற்றவை சிறப் புற்றனவாம். ஆதலால் அப்படிப்பட்ட கோயில்களில்

தீபாராதனைக்காலத்தில அவ்வவற்றிற் குள்ள திருப்புகழ்ப் பாடல்களில் ஒன்றையேனும் சொல்லும்படிக் கோயிலதிகாரிகள் செய்வார்களேயாயின் அது பெரும் புண்ணியமா யிருக்கும். திருப்புகழ் பெறாத கோயில்களிலும் பொதுப்பாடல்களா யுள்ளவற்றில் தக்கதொன்றைச்சொல்லித் தீபாராதனை செய்வித்தல் மிகவும் உத்தமம்.

முருகபெருமானுடைய அரும்பெரும்புகழாகிய இத் திருப்புகழை நியமமாகப் பாராயணஞ்செய்யும் அடியார்கள் இம்மையில் எல்லாப் பாக்கியங்களையும் பெற்று மறுமையில் மோக்ஷ மடைவார்க ளென்பதற்கு யாதோர் ஐயமு மில்லை.

நான் பாடல்கள் சேகரஞ்செய்யுங் காலத்தில் தங்களிட மிருந்த பிரதிகளைத் தந்த புண்ணியவான்களுக்கும், பிற ரிடத் திருந்தவைகளை வருவித்துத்தந்த அன்பர்களுக்கும் அநேக வந்தனம் அகமகிழ்ந் தளிக்கின்றேன். இவர்க ளிற் கருங்குழி - ஞானப்பிரகாச ஐயரவர்களுடைய குமார ராகிய ஆறுமுக ஐயரவர்களை முக்கியமாகச் சொல்ல வேண்டும். இவர், மேற்கூறிய இரண்டுவகைப்பட்ட உதவிக ளும் செய்ததன்றி அநேக நாள் என்னுடன் இருந்தும், தாம் தனியே யிருந்தும், பாடல்களுக்கு அகராதி முதலிய வற்படுத்தியும், அவைகளைப் பிரிக்கவேண்டியபடியே பிரித் தும், இன்னும் பலவித வேலை செய்தும், பேருதவிபுரிந் தனர். இவ்வளவும் இவர் பொருள்நசையினு லல்லாமல் திருப்புகழ் வெளியாகவேண்டு மென்கிற பேரவாவினு லேயே செய்தமையால், இது மிகவும் வியக்கற்பாலதேயாம்.

வரிசைப்படுத்தியபொழுது முருகக்கடவுளுக்கு முக்கிய மான படைவீடுகளாகிய திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர் சோலை ஆகிய ஆறு ஸ்தலங்களின் பாடல்கள் முறையே முதலில் வைக்கப்பட்டன. பஞ்ச பூத ஸ்தலங்க ளாகிய காஞ்சீபுரம், திருவானைக்கா, திருவண்ணுமலை, காளஹஸ்தி, சிதம்பரம் என்னும் இவற்றின்பாடல்கள் முறையே பின்பு வைக்கப்பட்டன. அப்பாலுள்ள ஸ்தலப்பாடல்கள்,

தெரிந்தவரையில், தொண்டைநாடு, சோழநாடு முதலிய நாடுகளின் கிரமப்படி பிரித்துவைக்கப்பட்டன. பொதுப் பாடல்கள் இறுதியில் வைக்கப்பட்டன. ஒரே சந்தமான பாடல்கள் பெரும்பாலும் ஒன்றாக வைக்கப்பட்டன. பிரபல மான ஸ்தலங்களையன்றி ஏனைய ஸ்தலங்களுள், பலவற் றின் இருப்பிடம் முதலிய விவரங்கள், சில அன்பர்கள் மூலமாகவும் வேறுவிதமாகவும் கிடைத்தன. அவற்றை அந்த அந்த ஸ்தலத்துப் பாடல்களின்கீழ்க் குறித்திருக் கிறேன். சிலவற்றின் இருப்பிடம் என்ன முயற்சிசெய்தும் இன்னும் தெரியவேயில்லை. பாடல்களில் அவசியமான இடங்களிற் குறிப்புக்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

முதலில், ஓலைப்புத்தகங்களி லுள்ள பாடல்களைக் கடிதத்திற் பெயர்த்து எழுதியும், திருத்தியானபின்பு அவைகளை வேறு கடிதங்களில் எழுதியும், உதவிபுரிந்த நண்பர்களுக்கும், இன்னும், இப்புத்தகம் அச்சுக்கு வருவ தற்குவேண்டிய எவ்விதமான உதவிபுரிந்த அன்பர்க ளுக்கும் மனப்பூர்வமாக வந்தனஞ்செய்கின்றேன்.

திருப்புகழ் அச்சிடவேண்டும் என்று பிரதிகள் சம்பா திக்கத் தொடங்கினதுமுதல் இதுவரையில் எனக்குண்டா யிருந்த பிரயாஸம் மிக அதிகமே. திருப்புகழ் அச்சிடப் பட்டு வெளிவரவேண்டும், அதை அன்பர்கள் வாசித்து ஆநந்த மடையவேண்டும் என்னும் ஆசையே இவ்வளவு பிரயாசத்திற்குங் காரணமாயிருந்தது, என் ஆசையை இவ் வளவு காலத்துக்குப் பின்பேனும் முருகபிரான் ஒருவாறு நிறைவேற்றுவித்தது அவருடைய பெருங்கருணையே.

முருகக்கடவுளுடைய அநுக்கிரகத்தினால் யாவருக்கும் க்ஷேமம் உண்டாகுக.

---

திருத்தணிகைப் பெருமான் திருவடிவாழ்க.

---

சேகரமான ஆயிரத்திருநூறு பாடல்களையும் அச்சிட்டு முடிந்தபின்பு ஒரே புத்தகமாக்கி வெளிப்படுத்த உத்தேசித் திருந்தேன். அச்சிடத்தொடங்கி இரண்டுவருஷ கால

மாகியும், பலவித அசந்தர்ப்பத்தால், இதுவரையில் ஆறு
நூறு பாடல்களே அச்சிட்டு முடிந்தன. மற்றை ஆறு
நூறு பாடல்களையும் அச்சிட்டுமுடிக்க எப்படியும் இன்
னும் இரண்டு வருஷம் செல்லும். அவ்வளவு காலம் புத்த
கத்தை வெளிப்படுத்தாமலிருப்பது யுக்தமாகத் தோற்ற
வில்லை. இதனை அச்சிடத்தொடங்கினபின்பு அச்சிடும்
விஷயத்தில் சென்னையில் எனக்கு உதவிபுரிந்து வந்த
ம-ா-ா-ஸ்ரீ - தணிகாசல நாயகரும், திருப்புகழ்ப் பாடல்
களைச் சீர்திருத்தி ஒழுங்குபடுத்தின திருப்பாதிரிப்புலியூர்-
ம-ா-ா-ஸ்ரீ - சிவசிதம்பர முதலியார் அவர்களும் சிவபத
மடைந்தார்கள். முதலியார் அவர்கள் தாம் எவ்வளவோ
பிரயாசப்பட்டுச் சரிப்படுத்திய திருப்புகழ்ப் பாடல்கள்
அச்சிற் பதிப்பித்து முடிகிறவரையில் இருந்து அச்சுப்
புத்தகத்தைக் கண்டு களிக்காமற் காலஞ் செய்ததைப்
பற்றி மிகவும் வியசனப்படுகிறேன். இக்காரணங்களாலும்,
அன்பர்கள் அநேகர் திருப்புகழ் எப்பொழுது வெளிப்
படுமோ என்று ஆவலாய் எதிர்பார்த்துக் கொண்டிருப்ப
தாலும், இனித் தாழ்க்கலாகா தென்றெண்ணி ஆன
வரையில் உடனே வெளிப்படுத்துவது உசிதமென்று தீர்
மானித்தேன். முருகக்கடவுளுடைய ஆறுபடை வீடுக
ளாகிய திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி,
திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர்சோலை, இவைகளின்
பாடல்களும், பஞ்சபூத ஸ்தலங்களாகிய காஞ்சீபுரம், திரு
வானைக்கா, திருவண்ணுமலை, காளஹஸ்தி, சிதம்பரம் இவை
களின் பாடல்களும் சேர்ந்து ௩௱௩-பாடல்களாகின்றன.
இவ் வறுநூற்று மூன்று பாடல்களையும் இப்போது முதற்
பாகமாக வெளிப்படுத்தியிருக்கின்றேன். மற்றை ஸ்தலங்
களின் பாடல்களும் பொதுப்பாடல்களும் சேர்ந்து ஆறு
நூறு பாடல்களாகும்: அவற்றை இரண்டாம் பாகமாக
விரைவில் வெளிப்படுத்த முயலுகிறேன். ஆறுமுகக்
கடவுள் அநுக்கிரகிப்பாராக.

தஞ்சாவூர் ஜில்லா,
திருத்தருப்பூண்டி,
ஜயஞு ஆவணி மீ,
1894-ஞு,
செப்டம்பர் மீ.

வ. த. சுப்பிரமணியபிள்ளை.

கணபதி துணை,

திருத்தணிகேசன் துணை.

# திருப்புகழ் இரண்டாம் பதிப்பின் முகவுரை.

பதினாறு வருஷங்களுக்குமுன் (1894-ஆம் வருஷத்தில்) அச்சிட்ட திருப்புகழ் முதற்பாகம் ஆயிரம் புத்தகங்களும் செலவாய் எட்டு வருஷங்களாயும், அதை யிரண்டாமுறை அச்சிடப் பல காரணங்களால் இதுவரை தடைப்பட்டது. இப்போதாவது இதைமறுபடி அச்சிட்டு, தமிழ்நாட்டார் பலரும் இதை வாங்கி வாசிக்கவேண்டுமென்று அடியேன் கொண்டிருக்கும் பேரவாவை நிறைவேற்றும் படியான பெரும் புண்ணியத்தையும் பாக்கியத்தையும் எனக்குத் தந்த கருணாநிதியாகிய முருகக்கடவுளுக்கு நான் என்ன கைம்மாறு செலுத்தவல்லேன் ?

இப்பதிப்பில், முதற்பதிப்பில் அக்காலம் தெரியா திருந்து பின்பு தெரிந்த பிழைகளெல்லாம் விலக்கப்பட்டன. திருவாவினன்குடி திருப்புகழ்ப்பாடல்கள் முதலிலும், பழநிப்பாடல்கள் அவற்றின் பின்னும் வைக்கப்பட்டன. ஸ்ரீ பெரும்பூதூருக்குச் சமீபத்தில் வல்லக்கோட்டை யென்றொரு புராதனமான சுப்பிரமணிய க்ஷேத்திர மிருக்கிறது ; அதற்குக் கோடை என்னும் பெயருண்டாம் ; அத்தலத்துக் குரிய திருப்புகழ்ப் பாடல்கள் திருச்செங் கோட்டுப் பாடல்களிற் பிசகாய்ச் சேர்ந்திருக்கின்றன என்று சிலநாளைக்குமுன் கேள்விப்பட்டேன். அப்பாடல்க ளாவன:—339 - 'கோடைநகர் வாழவந்த பெருமாளே' என்பதும், 341-'கோடைக்குள் வாழவந்த பெருமாளே' என்பதும், 349-'கோடைப்பதியோனே' என வருவதும், 350 'கோடையம்பதியுற்று நிற்கும் மயில்வீரா' என

வருவதும், 351-'கோடையெனும் பதி வந்த இந்திரர் பெருமாளே' என்பதும், 352-'கோடைத் தேவப்பெருமாளே' என்பதுந்தாம். இந்த ஆறு பாடல்களையும் வல்லக்கோட்டைக் குரிய பாடல்களாக வைத்துக்கொள்ளவேண்டும்.

வேறு ஸ்தலங்களுக்குரியவை என்று வெளியான பாடல்களை யெடுத்துவிட்டு அவைகளுக்குப் பதிலாகச் சரியான பாடல்கள் வைக்கப்பட்டன. * * *

மிகுந்த பிரயாசை எடுத்துக்கொண்டு திருப்புகழ்ப் பாடல்களையெல்லாம் செம்மையா யாராய்ந்து அவற்றினின்றும் வெளியான அருமையான சங்கதிகளை '*ஸ்ரீ அருணகிரிநாதசுவாமிகளின் சரித்திர ஆராய்ச்சி' எனப் பெயர்புனைந்து என் குமாரன் சிரஞ்சீவி - செங்கல்வராயன் எழுதினதை 'ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்' என்பதின் பின் சேர்த்திருக்கின்றேன்.

இவ்விரண்டாம்பதிப்பு கூடுமானவரையில் திருத்தமானதென்று சொல்லலாம். என்றாலும் பிழைகளிருக்கலாம். அவைகளை யெல்லாம் க்ஷமித்து வெளிவந்திருக்கும் பாடல்களை முருகக்கடவுளுடைய திவ்ய திருப்புகழ் என்று அன்பா யங்கீகரிக்கும்படி அன்பர்களைத் தாழ்மையுடன் வேண்டிக்கொள்ளுகின்றேன்.

292, லிங்கசெட்டித்தெரு,<br>
சென்னை.<br>
கீலகஹு மார்கழிமீ.<br>
1909ஹு ஜனவரிமீ.

வ. த. சுப்பிரமணிய பிள்ளை.

☞ குறிப்பு:—முன் நான் தெரிவித்திருந்தபடி திருப்புகழ் மூன்றாம்பாகத்துக்காக இத்தனைகாலம் பிரயத்தனப்பட்டும் 70-பாடல்கள் மட்டுந்தான் கிடைத்திருக்கின்றன †. ஏட்டுப்புத்தகங்கள் வைத்திருப்பவர்கள் தயவு செய்து அவைகளை யனுப்பினால் இன்னம் 30-பாடல்கள் சம்பாதித்து நூறு பாடல்களேனும் அச்சிடலாம். இனித் தாமதஞ் செய்யாமல் அவைகளைக் கூடிய விரைவில் அனுப்பும்படி புண்யவான்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

வ. த. சு.

---

* இது இனியச்சிடப்படும் மூன்றாம் பாகத்தில் வரும்.

† இவற்றில் 25 - பாடல்கள் இம் முதற்பாகம் மூன்றாம் பதிப்பில் அச்சேறிவிட்டன.

உ

திருத்தணிகேசன் துணை.

# திருப்புகழ் மூன்றாம் பதிப்பின் முகவுரை.

---

‘வெள்ளை வாரணப் பிள்ளை யார்பதம்
உள்ளு வார்மனக் கள்ள மாறுமே.’ *

திருப்புகழ் முதற்பாகம் இரண்டாம்பதிப்புப் புத்தகங்கள் 1909-ஆம் ௵ ஏப்ரில் ௴ வெளிவந்தன. அவையிற்றிற் சிலவற்றைக் களிப்புடன் கண்ணுற்ற மறுஞான்றே விடியற்காலையில் (17-4-1909) எமது தந்தையார் அவற்றின் பொருளாயுள்ள திருத்தணிகேசன் திருவடி சேர்ந்தனர் †. இரண்டாம் பதிப்புப் புத்தகங்களும் இரண்டாம் பாக புத்தகங்களுஞ் செலவாகிப் பத்து வருஷங்களாய்விட்டன. இதனிடையில் முருகக்கடவுளின் அநுக்கிரகத்தால் இத் திருப்புகழ்ப் பாக்களை எமது கன்னெஞ்சமுங் கரையும்படி இன்னிசையுடன் பாடும் வல்லமை வாய்ந்த வள்ளிமலை ஸ்வாமிகளின் இடைவிடா முயற்சியால் திருப்புகழின் அருமை பெருமைகளை யறிய லுற்ற அன்பர்கள் பலரும் அதனை மறுபதிப்பிடும்படி எம்மை வற்புறுத்தலாயினர். ஆயினும் நான்கு வருஷ காலமாய் (4-8-1914 முதல் 11-11-1918 வரை) நமது அரசாங்கத்தாருக்கும் ஜெர்மனி தேசத்தாருக்கும் நடந்த யுத்தத்தின் காரணமாக எல்லாப் பொருள்களும் தொழிற்கூலியும் பன்மடங்கு விலையேறிவிட்டபடியால் இக்காரியம் எம்போல்வாருக்குச் சற்று அசாத்தியமாகவே தோன்றிற்று. இங்ஙன மிருக்கு மெல்லையில்

“***ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்” என முன்னாள்
ஔவைமூ தாட்டி அருளிச் செய்த
நல்வழி யென்னுஞ் சொல்வழி யே, திரு

---

* இப்பாடல் திருப்புகழ் ஓலைப்புத்தக மொன்றன் முதலிற் காணப்பட்டது.

† இவரது சரித்திரம் தனியாக அச்சிடப்பட்டுள்ளது.

முருகனாற் றுப்படை முன்னுற இலங்கி
இந்நா விடத்தும் முன்னு விளங்குந்
திருப்பரங் கிரியெனும் பொருப்பமர் சேயடிக்
குழுவலன் புள்ள உத்தம பத்தர்,
முருகெனு மொழியி னுருகு நெஞ்சினர்,
மதுரைப் பெருநன் மாநகர் மறையவர்,
தவசினி துயரிய கவுசிக மரபினர்,
உடலுறு நோயை யொழித்திடற் கியன்ற
நூல்களிற் பயின்ற நுண்ணிய கேள்வியின்
உலகுளோர்க் குதவு முதார குணத்தினர்,
பிறவிநோ யொழிக்கும் பிரான்திருப் புகழிற்
பெரிதுள மகிழும் பெற்றிமை யுடையோர்,
எம்மிடம் மாறு இயைபு கொண்டவர்,
வேட்டவை நல்கும் வேங்கடேச னாகுந்
தம்பியப் பெயரை யிம்முக வுரையிற்
சாற்றுதல் தகாதெனத் தடுத்துத்
தந்தநற் பொருளால் வந்ததிப் பதிப்பே.

அருணகிரிநாத ஸ்வாமிகள் திருவாக்கென ஆன்றோர் கூறும் அருமை நூல்களை மூன்றுபாகங்களாக அச்சிடலாமெனக் கருதியுள்ளோம். இம் மூன்றாம்பதிப்பு I. முதற் பாகத்தில் முருகக்கடவுளின் ஆறுபடைவீடுகள் எனப்படும் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழநி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் ஸ்தலங்களுக் குரியனவான எல்லாப் பாடல்களும் (450–பாடல்கள்) அச்சிடப்பட் டிருக்கின்றன. II. இரண்டாம் பாகத்திற் (i) (காஞ்சிபுரம், திருவானைக்கா, திருவண்ணாமலை, ஸ்ரீகாளஹஸ்தி, சிதம்பரம் ஆகிய) பஞ்சபூத ஸ்தலங்களும், (ii) காசிமுதல் இராமேசம் ஈறாவுள்ள ஏனைய ஸ்தலங்களும், III. மூன்றாம்பாகத்திற் பொதுப்பாடல்களும், ஸ்வாமிகள் திருவாய்மலர்ந்துள்ள திருவகுப்பு, கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரநுபூதி இவைகளும், ஸ்வாமிகளின் சரித்திர ஆராய்ச்சி, திருப்புகழ் ஆராய்ச்சி, சந்தக்குறிப் பகராதி முதலியனவும் வரும்.

ஆறுபடை வீடுகளுக் குரியனவாய் இதுவரை இரண்டாம் பாகத்திருந்த (606-619, 621-626, 934, 956, 965, 1009, 1204, 1231 எண்ணுள்ள) 26-பாடல்களும், இதுவரை யச்சிடப்படாது இப்பதிப்பில் **27, 28, 89, 111, 116, 142, 170, 174, 176, 185, 224, 237, 269, 275, 300, 348, 361, 382, 399, 400, 402, 410, 420, 433, 442** எண்ணுள்ள **25** – புதுப்பாடல்களும் ஆக, ஐம்பத்தொரு பாடல்கள் இப்பதிப்பிற் சேர்ந்திருக்கின்றன.

வல்லக்கோட்டைக் குரிய பாடல்கள் திருச்செங்கோட்டுப் பாடல்களோடு பிழையாகச் சேர்ந்துவிட்டன என எந்தையார் முதற்பாகம் இரண்டாம் பதிப்பின் முகவுரையிற் குறித்த (339, 341, 349-352 எண்ணுள்ள) ஆறு பாடல்களும், வயலூருக் குரித்தெனத் தோன்றியதும் அப்பதிப்பில் 346-ஆவது எண்ணுள்ளதுமான ஒரு பாடலும் ஆக எழு பாடல்களையும், தனிச்சயம் என்பது குன்றுதோராடல் ஸ்தலங்களில் ஒன்று அன்றென ஏற்பட்டபடியால், இப்பொழுது இரண்டாம் பாகத்தில் அத்தலத்துக்குரிய 620-ஆம்பாடலையும், இனிவரும் இரண்டாம் பாகத்திற் காணலாம்.

எமது தந்தையார் காலத்துக்குப்பின் எமது ஊக்கக் குறைவாலோ தௌர்ப்பாக்கியத்தாலோ புதுப்பாடல் ஒன்றேனுங் கிடைக்கவில்லை. திருப்புகழ் மூன்றும்பாகமென அச்சிடுவதற்குப் போதுமான பாடல்கள் இல்லாமையால் முதற்பாகம் இரண்டாம்பதிப்பின் முகவுரைக் குறிப்பில் எமது தந்தையார் கூறியபடி அச்சிட வியலவில்லை.

இம் மூன்றும் பதிப்பு அச்சிலிருக்கும் பொழுது எமக்கு மிகவும் உதவியா யிருந்தவரும் எமக்குத் தந்தை போல் மந்திர முரைத்து எம்மிடம் எக்காலுந் தாய் போற் றலையளி கொண்டவருமான எமது தமக்கையார் (2-12-1920) சென்னையிற் சிவபதமடைந்தனர். அவர்கள்

இப் பதிப்பைக் கண்டு களியாமற் காலஞ்சென்றது எமக்கு மெத்த வருத்தத்தை விளைவிக்கின்றது. இப் பதிப்பை யச்சிடுவதில் எமக்கு மிக்க உதவிபுரிந்த சென்னைக் காகித வியாபாரிகளிடம் (Messrs. John Dickinson & Co., Paper Merchants) உத்தியோகத்துள்ள சேலம்-கி. [K. S.]துரைசாமி ஐயங்கா ரவர்களுக்கும், உயர்நீதிச் சாலையில்(High Court) உத்தியோகமுள்ள ஆற்காடு-கா. [A. K.] ராமஸ்வாமி ஐய ரவர்களுக்கும், கம்பனிகள் ரிஜிஸ்தராகும் ஆபீஸில் (Registrar of Joint Stock Companies) உத்தியோகமுள்ள ஆங்கரை-கி. [A. K.] சுப்பிரமணிய ஐய ரவர்களுக்கும், இதனை யச்சிட இசைந்த P. R. ராமையர் கம்பனியாருக்கும், இன்னும் இப்பதிப்பு வெளிவருமாறு தமது மனோவாக்குக்காயங்களால் உதவிய அன்பராயினார் பலருக்கும் யாம் மிகவும் நன்றி பாராட்டுகின்றோம்.

பதினாறாயிரந் திருப்புகழ்ப் பாக்களில் இப்பொழுது கிடைத்தனவாக நாமெண்ணியிருப்பன 1300-பாடல்களே யாகின்றன. ஏனைய எக்கதி புக்கன? வேறெந்த நாட்டிலாவது வேறெந்த பாஷையிலாவது இத்துணை யருமை வாய்ந்த நூலொன்றுளதாயின் அந்நாட்டினராவது அப்பாஷாபிமானிகளாவது இத்துணை ஊக்கக்குறைவாயிருப்பார்களா? தமிழபிமானிகளாயுள்ள ஒவ்வொருவரும் தம்மாற் கூடியவரையிற் பிரயாசைப்பட்டால் இன்னமும் பாடல்கள் கிடைக்குமென்பது எமது துணிபு. சேது மன்னர் போன்ற செந்தமிழ்ச் செல்வர்களும் தென்னாட்டு மடாதிபதிகளும் இந் நன்முயற்சியை மேற்கொள்ளுமாறு அவர்களை மிகவும் வேண்டிக்கொள்கின்றோம்.

இப்பதிப்பில் ஒவ்வொரு தலத்துக்கும் முதலில் எமக்குத் தெரிந்தவரையில் அதனிருப்பிடம் விசேடம் முதலியவற்றை ஒருவாறு குறித்திருக்கின்றோம். விநாயகமலை, ராஜகெம்பீரவளநாட்டுமலை, ஞானமலை, கநகமலை, புகழிமலை இவற்றைப்பற்றி ஒன்றுந் தெரியவில்லை. இப்படியே

இனிவரும் இரண்டாம் பாகத்துள்ள அத்திக்கரை, இந்தம்பலம், ஒடுக்கத்துச்செறிவாய், கந்தனூர், கந்தன்குடி, கரியவனகர், காமத்தூர், சிறுவை (சிறுவாபுரி), தான்றோன்றி, தேவனூர், பாகை, பெருங்குடி, மருத்துவக்குடி, மாயாபுரி, முள்வாய், வாகைமாநகர், விஜயபுரம் என்பவற்றைப்பற்றியும் விவரந் தெரியவில்லை.

பொதியமலை யென்பது (இப்பதிப்பில் 412-413-ஆம் பாடல்க ளுள்ளது) அம்பாசமுத்திரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு ஏழுமைல் தூரத்தி லுள்ள தலபுராணம் பெற்ற பாவநாசம் ஆகும் என வைப்புத்தலவிளக்கம் நான்காம் பாகத்தில் தாம் அச்சிட்டிருப்பதைப் புதுவை-வே. சுப்பராய முதலியா ரவர்கள் சில தினங்களுக்குமுன் எமக்குத் தெரிவித்தனர். இவ்வாறு அன்பராயினோர் தயைசெய்து தாங்கள் அறிந்துள்ளவற்றை எமக்குத் தெரிவிப்பார்களாயின் இனி வரும் பதிப்பிலேனும் அவ்விஷயங்களை வெளியாக்கலாம்.

மற்ற இரண்டு பாகங்களும் விரைவில் வெளிவருமாறும் திருப்புகழ் ஓலைப்புத்தகங்கள் தம்மிடத்திருப்பனவற்றைந் தந்தும் பிறரிடத் திருப்பனவற்றைத் தரும்படி அவர்களைத் தூண்டியும் அன்பர்கள் உதவுமாறுந் திருத்தணிகேசன் திருவருள்கூடுமாறு அவரது திருவடிகளைத் தியானிக்கின்றேம்.

சென்னை: 16. 5. 1921.
292, லிங்கசெட்டித் தெரு,
துன்மதி௵ வைகாசி௴ ௩

வ. சு. சண்முகம்பிள்ளை.
வ. சு. செங்கல்வராயபிள்ளை.

சிவமயம்.

வெற்றிவேலுற்ற துணை.

# ஸ்ரீ அருணகிரிநாதஸ்வாமிகள்

## சரித்திரச் சுருக்கம்.

இவர் மகாஜனங்கள் நினைக்க முத்தியளிக்கும் திவ்ய க்ஷேத்திரமாகிய திருவண்ணாமலையிலே அவதரித்தவர். இவர் பிரபுடதேவ மகாராஜா காலத்தில் இருந்ததாகச் சொல்லப்படுவதாலும், அவ்வரசன் இங்கிலீஷ் வருஷம் 1450-இல் ஆண்டதாக ஏற்படுவதாலும், இவர் சற்றேறக் குறைய 470-வருஷங்களுக்குமுன் இருந்திருத்தல்வேண்டும். இவர் பாலியத்திற் சிற்றின்பத்தில் மூழ்கியிருந்து அதனால் அதிக துன்புற்று, பின்பு முருகக்கடவுளுடைய அநுக்கிரகத்தினாலே அத்துன்பங்கள் நீங்கி, மெய்ஞ் ஞானோபதேசம்பெற்று, அதிமதுரமும் அற்புதமுமான பாடல்களினாலே அக்கடவுளுடைய திருப்புகழைத் துதித் தார் என்பது இவர் பாடல்களினாலேயே நன்கு விளங்கு கின்றது.

திருஞானசம்பந்தசுவாமிகள் முதலிய சைவசமயா சாரியர்கள் எப்படிச் சிவஸ்தலங்கள்தோறும் சென்று தேவார திருவாசகங்களைப் பாடினார்களோ அப்படியே அருணகிரிநாதஸ்வாமிகளும் சிவஸ்தலங்களுக்கும் சுப்பிர மணியக்ஷேத்திரங்களுக்கும் சென்று, அங்கு வீற்றிருக்கும் சுப்பிரமணியக்கடவுளைப் பாடிவந்தார். அப்பாடல்களுக் குத் திருப்புகழ் என்னும் பெயர் உண்டாயிற்று. ஸ்வாமிகள் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள் பதினாறாயிரமென்று

*ஆன்றோர் கூறியிருக்கின்றனர். அவைகளில் இக்காலத்தில் ஓராயிரமேனும் ஒருங்கு கிடைப்பது அரிதாயிருக்கிறது. இவருடைய அதி அற்புதமான வாக்கு வல்லபத்துக்கு,

"வாக்கிற் கருணகிரி வாதவூ ரார்கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனூர்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்"

என்னும் பாடலே சான்றும். இவர் வாக்கின் பிரபாவத்தைப் பற்றியன்றோ அதைக் 'கடல்மடைதிறந்தவெள்ளம்' என்றும் கூறுகின்றனர்.

அருணகிரிநாத ஸ்வாமிகள் அருளிச்செய்த மற்றை நூல்கள் திருவகுப்பு, கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரநுபூதி என்பவைகளாம். கந்தரந்தாதி, ஸ்வாமிகள் வில்லிபுத்தூராருடன் தர்க்கஞ்செய்த காலத்திற் பாடப்பட்டதென்றும் அதற்கு உரை அவ்வில்லிபுத்தூராரே செய்தனரென்றும், அதில் †"திதத்த" என்று தொடங்கும் ருசு-ஆவது செய்யுளுக்கு அவர் உரை செய்யமாட்டாமல் திகைத்துத் தோல்வியுற்றனரென்றும், அதற்கு ஸ்வாமிகளே உரையருளிச்செய்தனரென்றும், பின்பு மற்றைப் பாடல்களுக்கு வில்லிபுத்தூராரே உரைசெய்து முடித்தனரென்றும் ஆன்றோர் கூறியிருக்கின்றனர்.

---

* வரகவி-மார்க்கசகாயதேவர் அருளிச்செய்த திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், காப்புப்பருவம் 10-ஆவது செய்யுள்:—

"அம்மைமுலை யுண்டுவிளை யாடுமிளை யோனைஎமை யாட்கொண்ட குமரேசனைச், செம்மையுள ஆறுமுக னைத்திருவி ரிஞ்சைவரு சேயைப் புரந்தருள்கவே, மும்மைமல மகலநக் கீரமுனி சொன்னதிரு முருகா றெனுந்தேறலும், எம்மருண கிரிநாத ரோதுபதி னாறா யிரந் திருப் புகழமுதுமே."

† "திதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்த திதித்தித்த தேதுத் துதித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாத திதேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே."

ஸ்வாமிகளுடைய பாடல்கள் அதி அற்புதமான வாக்கா யிருப்பதன்றி, பொருளமைவிலும் மிகச் சிறந்தனவாக இருக்கின்றன. அவைகளி லடங்கியிருக்கும் விசேஷார்த்தங் கள் தெளிந்த ஞானிகளுக்கேயன்றி நம்போற் சாதாரண மானவர்களுக்குப் புலப்படுவது கஷ்டம். மகானுகிய தாயு மான ஸ்வாமிகள் அவைகளைக் கண்டுணர்ந்தன்றே,

"ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார்—வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றூர் தன்னையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னன்."

என்று வியந்து கூறியிருக்கின்றனர்.

வேலு மயிலுந் துணை.

௨

குகமயம்.

வேலு மயிலுந் துணை.

# பதிப்பாசிரியர் மீது சிறப்புப் பாயிரம்.

---

மஹாமஹோபாத்தியாயர் - பிரும்மஸ்ரீ-

## உ. வே. ஸ்வாமிநாதையரவர்கள் இயற்றியவை.

பூவரு மமல னயிற்கரச் செவ்வேள் பொன்னடி யேநினைந் துருகித்
தாவரு மருண கிரிப்பெருங் கவிஞன் சாற்றிய திருப்புகழ் பலவும்
மேவருநிலையை யுணர்ந்தவனருளே மெய்த்துணை யாக்கொடு தேடி
யாவரும் பெறச்செய் சுப்பிரமணிய வேந்தல்சீ ரியம்புறற் பாற்றே.

தக்கசீர் நீதி பதியெனத் தான்சேர் தலந்தொறு முளசிவா லயத்தின்
மிக்கசீர்த் தமிழ்நூல் பலவெளிவரச்செய் மேதகை யாணடிநினைந்தே
நெக்கசீ ருளத்த னவனடி யவர்பா னேயமிக் குடையவ னெங்குந்
தொக்கசீர் மிகுத்த சுப்பிரமணிய சுருணவேள் போல்பவர் யாரே.

---

திருப்புகழ் இரண்டாம்பாகம் முதற்பதிப்புப் பாடல்களை
அச்சிடுமுன் பரிசோதித்த சேலம் காலேஜ்
தமிழ்ப்பண்டிதர்
ச ர வ ண ப் பி ள் ளை ய வ ர் க ள்
இயற்றியவை.

---

வேதமுதற் பொருளியல்பைப் பரமனிரு செவிமடுப்ப
விளம்புஞ் செவ்வேள்
மேதகுமெய்ப் புகழுயர்ச்சி திருப்புகழென் றொருபெயரால்
விளங்கக் காட்டிப்
பூதலத்தி லருணகிரி நாதர்திரு வாய்மலர்ந்த
புனிதப் பாடல்
ஏதமறு பதினாறு யிரமென்பா ரதன்பெருமை
யியம்பற் பாற்றோ. (க)

அன்னவற்றி லொருசிலவே யச்சுவா கனத்துலவை
வவற்றை நாளு
மன்னியவன் பாலோதி யுளமுருகிப் பாராட்டி
வருங்கா லின்னும்
பன்னுபல பாடலுள வெனும்பான்மை தெரிந்தவையும்
பயில வேண்டும்
இந்நிலத்தி லெனுங்காதல் முதிர்தரலா லியன்றமுயற்
றிழைப்பா மென்றே (உ)

மூவரு ளியவாக்கிற் சிலகேட்டுக் கனிந்துருகி
முழுதுங் காணற்
காவல்பெரு கியவளவர் கோன்முயன்ற திறநிகர்ப்ப
அரிய பாடல்
மேவுதிருப் புகழ்முறைக ளிருக்குமிட னினிவினவி
விருப்பாற் றேடித்
தாவிலா திருந்தபல பிரதிவர நோக்கியின்பச்
சலதி மூழ்கி (௩)

ஆங்கவற்றி லடங்கியநற் பனுவலை வீராறுநூ
றாக வுள்ளம்
ஏங்கியே யேனையவை யெக்கதிபுக் கனவோவென்
றினைந்து ஞானத்
தோங்குமறு முகப்பரமன் திருவருள்போன் மிதுவெனத்த
னுள்ளந் தேறிப்
பாங்குபெற வவையெங்கும் பயின்றின்ப மிகவிளைக்கும்
பான்மை நாடி (௪)

செல்லேறிப் பலவகைய வழுஉப்பொதிந்து சிதைந்துமுறிந்
தகவை நீண்ட
*புல்லேட்டைத் தக்காரைக் கொடுதிருத்தி யுறத்திருத்திப்
பூம்பா வைப்போர்

---

* புல் = பனை.

வில்லேறு மதிமுகத்தாள் பொடியினின்று மேலெழுந்த
வியப்பீ தென்ன
மல்லேறுந் திருப்புகழாந் தேம்பாவை யச்சியற்றி
வழங்கி னுனல். (ரு)

மன்னுசிவ புண்ணியமா மிப்பணியைக் கடப்பாடாய்
மதித்துச் செய்த
அன்னபெருந் தகையாரென் னிடிற்புகல்வேந் தொண்டைநாட்
டகத்து மேவிக்
கன்னியுமை யறம்வளர்க்குங் கச்சிநகர் மேல்பாலுங்
கவின்வன் றெண்டர்க்
கன்னமறி யாப்பரம னன்னமிரந் தூட்டுகச்சூ
ரதுகீழ் பாலும் (சு)

* விடக்குப்பட் டொளிர்வேலோன் சூர்முதலைப் பொருதழித்த
வீர மாறக்
†கடக்குப்பட் டணிந்ததெனத் திகழ்முலையா ரிருவரொடுங்
களிப்பு நீடித்
† தடக்குப்பட் டலர்முப்பூத் தவருது சூடுதிருத்
தணியாம் வெற்பு
வடக்குப்பட் டிடவுநின்ற வடக்குப்பட் டெனும்பதியில்
வந்த தூயோன். (எ)

பரவுபுகழ் பெருகியசீர் கருணீக மரபுதித்தோன்
பாரி லாசை
விரவுதாரக் கௌதமனுர் கோத்திரத்தான் முரணிருவர்
மேலுங் கீழுந்
தருவியுநா டருமருணைப் பரமனடிப் புகழ்நாளுந்
தூய வன்போ
டுரைசெய்தணி காசலப்பேர்ச் சுகுணனுனுற் றியதவத்தி
னுருவாஞ் சீலன். (அ)

---

* விடக்கு=ஊன். † கடமும் தடமும் நான்காம் வேற்றுமை உருபேற்று அத்துச்சாரியை யின்றி வந்தன.

இலக்கணமுற் றிடக்கமலை முனமளித்த மாரனுரு
விழந்தோ னாகி
அலக்கணுற்ற திறநோக்கி யவனிலுமிக் குயர்சேயை
யாய நோன்பால்
நலக்கவளித் தெனக்கணவன் மொழிகடவா விருந்தோம்பு
நலஞ்சால் சீர்த்தி
இலக்குமியாம் பெண்ணரசி யீன்றெடுத்த தனிப்பால
னின்னுங் கேண்மின். (௯)

நலமருவு வாய்மைமுதற் பலகுணமு நிறைந்துசிவ
ஞானம் பத்தி
இலகுறப்பூண் டகங்கார மறவிடுத்துத் துலாக்கோலி
னியல்பி தென்ன
நிலமிசையோர் புகழ்ந்துரைப்ப நீதிபதி யதிகார
நிகழ்த்து சீரான்
வலமருவு தணிகேச னடிபணிசுப் பிரமணிய
மகிபன் றானே. (௧௦)

குகமயம்.

வெற்றிவே லுற்ற துணை.

# திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரம்.

[இப்பாயிரம் பூர்வத்துள்ள அபியுக்தர்களாற் செய்யப்பட்டுப் புராதன பிரதிகளில் எழுதி வழங்கிவருவது.]

நூற் சிறப்பு.

எல்லாரு ஞானத் தெளிஞரே கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி. (க)

மாணிக்கம் பூண்பார்க்கு மற்றொருகல் வேண்டுமோ
ஆணிப்பொன் கையுறுவார்க் கையுறவேன்—பேணிப்பின்
செவ்வேல் விநோதன் திருப்புகழ்சிந் தித்திருப்பார்க்
கெவ்வேலை வேண்டு மினி. (உ)

சீராந் திருப்புகழைச் செவ்வேள்மே லன்பாக
ஆராய்ந் துரைத்தான் அருணகிரி—நேராக
அந்தப் புகழை யநுதினமு மோதாமல்
எந்தப் புகழோது வீர். (ங)

அருணகிரி நாத னகிலதலத் துன்னைக்
கருணையினுற் பாடுங் கவிபோற்—பிரியமுற
வேறுமோர் புன்கவிகள் வேலோனே நின்செவியி
லேறுமோ என்னே யினி. (ச)

ஆனைமுக வற்கிளைய ஐயா அருணகிரி
தேனனைய சொல்லான் திருப்புகழை—யானினைந்து
போற்றிடவு நின்னைப் புகழ்ந்திடவும் பொற்கமலஞ்
சாத்திடவு மோதிடவுந் தா. (ரு)

*திருப்புகழ்ச் சிரவணத்தால் வேதார்த்தாதி அனைத்தும் அறிய லாம்; ஆதலால் அதனையே கேட்க என்றது.*

வேதம்வேண் டாஞ்*சகல வித்தைவேண் டாங்கீத
நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டாம்—ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள் போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம். (௬)

### நூற் பயன்.

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம்பெறலாம்—மோனவீ
டேறலாம் யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினார்க் காமேயிக் கூறு. (௭)

ஆறுமுகந் தோன்றும் அழகியவேல் தோன்றுமவன்
ஏறுமயில் தோன்று மெழில்தோன்றும்—சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்தினோர் பால். (௮)

*அன்பர் வினவ ஆண்டவன் விடையருளியதாக மேலையதை வற்புறுத்தியது.*

பொருப்பது பொடிப்பட விடுத்திடுகை வேலா
இருட்பிட முனக்கெது எனக்கரு ளியம்பாய்;
உருக்ககல் விழுக்குல மொழுக்கமிலை யேனுந்
திருப்புகழ் படிப்பவர் மனத்தினி லிருப்பாம். (௯)

*அங்ஙனம் அருளக்கேட்ட அன்பர் ஆண்டவனை நோக்கிக் கூறியதாகத் திருப்புகழ் படிப்போர் சீர் கூறியது.*

திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே
ஒருத்தரை மதிப்பதிலை யுன்றனரு ளாலே
பொருப்புக மிகப்பொருது வென்றமயில் மீதே
தரித்தொரு திருத்தணியில் நின்ற பெருமானே. (௰)

---

* சகலவித்தை = அறுபத்து நான்கு கலைஞானங்கள்.

நூலாசிரியர் பெயரோடு நூற்பண்பும் பெயரும் உணர்த்தி அதனைத் துதிப்போர் பேறுங் கூறியது.

ஓராறு மாமுகனும் உச்சிதமெய்ஞ் ஞானகுகன்
பேரால் அருணகிரி பேருலகிற்—சீராருந்
தோத்திரம தாகத் துதிக்குந் திருப்புகழை
ஏத்தினவ ரீடேறு வார். (கக)

வள்ளிமண வாளன் மயிலேறும் வள்ளல்தனைத்
தெள்ளுதமி ழாற்புனைந்து சீர்பெறவே—உள்ளபடி
வைப்பாம் அருணகிரி வாழ்த்துந் திருப்புகழைக்
கற்பார் கரையேறு வார். (கஉ)

திருப்புகழ் இன்ன இன்னதற்கு இன்ன இன்னதாம் எனல்.

அருணகிரி நாதர்பதி னாறு யிரமென்
றுரைசெய் திருப்புகழை யோதீர்—பரகதிக்கஃ
தேணி யருட்கடலுக் கேற்ற மனத்தளர்ச்சிக்
காணி பிறவிக் கரம். (கரு)

திருப்புகழ் வழிபாட்டாற் கூற்றையும் வெல்லலாம் எனக் கெடிபெற உரைத்தது.

திருப்புகழைக் கற்கத் திருப்புகழைக் கேட்கத்
திருப்புகழை நித்தஞ் செபிக்கத்—திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே கூற்றைவென்று
கெர்ச்சிக்க லாமே கெடீ. (கச)

திருப்புகழின் பிரபாவம்.

மடங்க னடுங்குந் தனைச்சுடு மீதென்று மாதிரத்தோர்
அடங்கி நடுங்குவர் சூலா யுதமென் றசுரர்கடல்
ஒடுங்கி நடுங்குவர் வேலா யுதமென் றுரகனுங்கீழ்க்
கிடங்கி னடுங்கு மயிலோன் திருப்புகழ் கேட்டளவே. (கரு)

திருப்புக ழடியார் பெருமை.

திருப்புகழ் வல்ல சுரர்மகள் நாயகன் சங்கரற்குக்
குருப்புகழ் வல்ல குமரேசன் ஷண்முகன் குன்றெறிந்தோன்
மருப்புகழ் வல்ல அருண கிரிபெயர் வள்ளல்சொன்ன
திருப்புகழ் வல்லவர் சீர்பாதத் தூளியென் சென்னியதே. (கசு)

திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரம் முற்றிற்று.

☞ புத்தகத்தைப் படிக்கத் தொடங்குமுன் பின்வரும் திருத்தங்களைச் செய்துகொள்க. எழுத்துச் சிதைவினாலும் அச்சுப் பிறழ்வினாலும் சிற்சில இடங்களிலுண்டான பிழைகளை ஆங்காங்குத் தக்கவாறு திருத்திக்கொள்க.

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கக | 16 | 12 | சிந்தைகூர ; | சிந்தைகூரக் ; |
| ௬உ | 31 | 22 | கறுக்குக்கொண் | கறுக்குங்கொண் |
| ௫க | 57 | 9 | பேரார | போரார |
| க0௬ | 127 - ஆம் பாடலுக்குப் பின்வரும் குறிப்பைச் சேர்த்துக் கொள்க : | | | |

"பவளச் சடிலப் பரமற் கொருசொற் பகர்வோனே—
பழனப் பொழில்சுற் றுறுபொற் றணிகைப்
பதியிற் குமரப் பெருமானே."—என்றும் பாடம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| க௬௬ | 168 | 11 | கிாண | கிரண |
| க௯௬ | 182 | 14 | வுற்றேரு | வுற்றொரு |
| க௬௭ | 216 | 5 | வேவு | மேவு |
| க௭க | 236 | 16 | துன்றுதோ | துன்றுதோ |
| உ0க | 268 | 23 | மணத்தை | மணத்த |
| உ0௭ | 277 | 22 | டிச்சுழ | டிக்குழ |
| உ௬௬ | ... | 2 | வவ்வி | வல்லி |
| உ௯௬ | 331 | 22 | திரிய | தெரிய |
| உ௮௫ | 377 | 10 | பொழிலேறுஞு- | பொழிலேறுஞ்- |
| ௬கக 420 ஆம் பாட்டின் குறிப்பு | ... | | கருளிய | கருளியதாய் |
| ௬உ0 | 422 | 2 | தரங்க | தரங்கம் |
| [௬] | பாட்டு முதற் குறிப்பகராதி | | குதலைமொழியினற் | குதலைமொழியினர் |

# முருகக்கடவுள் துதி.

## ஆசிரிய விருத்தம்.

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
　　ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
　　குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
　　வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
　　*ஆதியம ராவதிய மர்ந்தபெரு மாளே.

வேலு மயிலுந் துணை.

---

* 'ஆதி யருணாசல மமர்ந்த பெருமாளே' என்றும் பாடம்.

உ

கணபதி துணை.

திருத்தணிகேசன் துணை.

சிவமயம்.

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்.

விநாயகர் துதி.

கைத்தல *நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்-
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும் ;
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை-
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே ;
முத்தமி ழடைவினை †முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே-
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா ;
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை ‡யிபமாகி-
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே. (க)

---

* 'நிறையவல் முப்பழ மொடுபொரி' என்றும் பாடம்.

† முற்படு கிரி = மேரு மலை.

‡ இபம் = யானை.

இதன் முடிபு.

கரிமுகன் அடிபேணி...அடியவர் புத்தியி லுறைபவ! கற்பகம்! என, வினை...எகும். (ஆதலால் யான்) ... அரன்மகன்...மதயானை (ஆகிய) மத்தள வயிறனை, உத்தமி புதல்வனை ... மலர்கொடு பணிவேன். (என்செய்து, எதன்பொருட்டுப் பணிவேன் எனில்)... முதல்வோனே !...அதிதீரா !...பெருமானே ! (எனத்துதிசெய்து, எடுத்துக்கொண்ட துதிநூ லாகிய இப்பிரபந்தம் இடையூ றின்றி யினிது முடிதற்பொருட்டுப் பணிவேன் என்க.)

---

* உம்பர்தருத் தேனுமணிக் கசிவாகி-
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி ;
இன்பரசத் தேபருகிப் பலகாலும்-
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே ;
தம்பிதனக் காகவனத் தணைவோனே-
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே ;
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே-
ஐந்துகரத் தானைமுகப் பெருமானே. (உ)

† பக்கரைவி சித்ரமணி பொற் ‡ கலணை யிட்டநடை
பக்ஷியெனு முக்ரதுர கமுநீபப்-
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும் ;
திக்கதும திக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்-
§ செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
செப்பெனஎ னக்கருள்கை மறவேனே ;

---

* உம்பர்தரு = சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்னும் ஐவகைத் தெய்வத விருக்ஷங்கள். தேனு = காமதேனு என்னும் தெய்வப் பசு. மணி = சிந்தாமணி யென்னும் தெய்வத ரத்நம். இம் மூன்றும் தம்மை யடைந்தோர்க்கு அவர்கள் விரும்பிய பொருள்களைத் தரவல்லன.

† பக்கரை = அங்கவடி. ‡ கலணை = கல்லணை = குதிரைச் சேணம்.

§ செய்ப் பதி = வய லூர்.

*இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
எட்பொரிய வற்றுவரை யிளநீர் †வண்-
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்;
மிக்கஅடி சிற்கடலை பக்ஷணமெ னக்கொளொரு
விக்கிநச மர்த்தனெனு மருளாழி-
வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமாளே. (௩)

விடமடைசு வேலை யமரர்படை சூலம்
விசையன்விடு பாண மெனவேதான்-
விழியுமதி பார விதமுமுடை மாதர்
வினையின்விளை வேது மறியாதே;
கடியுலவு பாயல் பகலிரவெ னாது
கலவிதனில் மூழ்கி வறிதாய-
கயவனறி வீன னிவனுமுயர் நீடு
கழலிணைகள் சேர அருள்வாயே;
இடையர்சிறு பாலை திருடிகொடு போக
இறைவன்மகள் வாய்மை யறியாதே-
இதயமிக வாடி யுடையபிளை நாத
கணபதியெ னுமம் முறைகூற;
அடையலவ ராவி வெருவஅடி கூர
அசனுமறி யாம லவரோட-
அகல்வதென டாசொ லெனவுமுடி சாட
அறிவருளும் ஆனை முகவோனே. (௪)

நினது திருவடி சத்திம யிற்கொடு
நினைவு கருதிடு புத்திகொ டுத்திட
நிறைய அமுதுசெய் முப்பழ மப்பமு நிகழ்பால்தேன்-

---

* இக்கு + அவரை; இக்கு = கரும்பு.

† வண்டு எச்சில் = தேன்.

நெடிய வளைமுறி யிக்கொடு லட்டுகம்
நிறவி லரிசிப ருப்பவ லெட்பொரி
நிகரி லினிகத லிக்கனி வர்க்கமு     மிளநீரும்;
மனது மகிழ்வொடு தொட்டக ரத்தொரு
மகர சலநிதி வைத்தது திக்கர
வளரு கரிமுக வொற்றைம ருப்பனை     வலமாக-
மருவு மலர்புனை *தொத்திர சொற்கொடு
வளர்கை குழைபிடி †தொப்பண குட்டொடு
வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே;
தெனன தெனதென தெத்தென னப்பல
‡சிறிய அறுபத மொய்த்துதி ரப்புனல்
திரளு முறுசதை பித்தநி ணக்குடல்     செறிமூளை-
செருமு வுதரநி ரப்புசெ ருக்குட
னிரைய வரவநி றைத்தக ளத்திடை
திமித திமிதிமி மத்தளி டக்கைகள் செகசேசே;
எனவெ துகுதுகு துத்தென வொத்துகள்
துடிக ளிடிமிக வொத்துமு ழக்கிட
டிமுட டிமுடிமு டிட்டிமெ னத்தவி     லெழுமோசை-
இகலி யலகைகள் கைப்பறை கொட்டிட
இரண பயிரவி சுற்றுந டித்திட
எதிரு நிசிசர ரைப்பெலி யிட்டருள் பெருமாளே. (ரு)

---

* தொத்திர சொற்கொடு = தோத்திர சொல் கொண்டு.

† தொப்பணம் = தோப்பணம், தோப்புக்கரணம்.

‡ சிறிய அறுபதம் = ஈ.

சிவமயம்.

# திருப்புகழ்.

## நூல்.

௧. *முத்தைத்தரு பத்தித் திருநகை
†அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோதும்
முக்கட்பர மற்குச் ‡சுருதியின்
முற்பட்டது கற்பித் §திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரு மடிபேணப்;
பத்துத்தலை தத்தக் கணை ||தொடு
ஒற்றைக் ¶கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியி லிரவாகப்
0பத்தற்கிர தத்தைக் கடவிய
$பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பக்ஷத்தொடு ரக்ஷித்தருள்வது மொருநாளே;

---

* 'முத்தைத் தரு' என்னும் இச் செய்யுள் அருணகிரிநாதர் ஆதியில் அருளிச் செய்ததாக ஆன்றோர் வரைந்து வழங்கி வருதலின் முதலில் வைக்கப்பட்டது.

'முத்தித்தரு பத்தித் திருநகை' என்றும் பாடம்.

† அத்தி=தெய்வயானை. ‡ சுருதியின், முற்பட்டது=பிரணவம்.

§ இருவர்=பிரம விஷ்ணுக்கள்.

|| தொட்டு எனற்பாலது தொடு எனத் தொகுக்கப்பட்டது.

¶ கிரி மத்தைப் பொருது=மந்தரகிரியாகிய மத்தைக்கொண்டு (திருப்பாற்கடலைக்) கடைந்து.

0 பத்தன்=அருச்சுனன்.

$ பச்சைப் புயல்=விஷ்ணு.

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு *கழுதாடத்-
திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக எனவோதக்;
கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை-
கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே.

---

### இதன் முடிபு.

அத்திக்கிறை! ... சரவண!... குருபர! எனவோதும் பரமற்கு... கற்பித்து, இருவரும்...அமரரும் அடிபேண, ...பயிரவி நடிக்க,...கழுது ஆட, ...அட்ட பயிரவர்...ஓத, பறை கொட்ட,... கூகை புக்குப் பிடி யென,...அவுணரை வெட்டிப் பலியிட்டு,...கிரி குத்துப்பட...பொரவல பெருமாளே!...தலைதத்தக் கணைதொட்டு, ... கிரிமத்தைப் பொருது, ... பகல்... இரவாக ... இரதத்தைக் கடவிய பச்சைப்புயல் மெச்சத்தகு பொருளே! (நீ எளியேனை) இரக்ஷித்தருளும் ஒருநாளும் உளதோ?

---

* கழுது=பேய்.

முருகக்கடவுளின் முக்கிய திருப்பதிகள் ஆறனுள்

முதலாவது

## திருப்பரங்குன்றம்.

[மதுரைக்குத் தென்மேற்கு 4-மைல். சம்பந்த ஸ்வாமிகள் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் இவர்களுடைய பாடல் பெற்றது. முருகக் கடவுள் தெய்வயானையம்மையை மணந்த ஸ்தலம். தீர்த்தம்—சரவணப் பொய்கை. மலைவலம் வரலாம். நக்கீரதேவர் பூதத்தாற் குகையி லடைக்கப்பட அவர் திருமுருகாற்றுப்படை பாடி வேலாயுதத்தி னுதவியாற் குகையினின்றும் வெளிவந்த அரும்பதி. நிரம்பவழகியர் பாடிய ஸ்தலபுராணமொன் றுளது.]

**2.** கனகந்திரள் கின்றபெ ருங்கிரி
தனில்வந்துத கன்தக னென்றிடு
கதிர்மிஞ்சிய செண்டையெ றிந்திடு கதியோனே-
கடமிஞ்சி யநந்த விதம்புணர்
கவளந்தனை யுண்டு வளர்ந்திடு
கரியின்றுணை யென்று பிறந்திடு முருகோனே;
பனகந்துயில் கின்ற திறம்புனை
கடல்முன்பு கடைந்த பரம்பரர்
படரும்புய லென்றவ ரன்புகொள் மருகோனே-
பலதுன்ப முழன்று கலங்கிய
சிறியன்புலை யன்கொலை யன்புரி
பவமின்று கழிந்திட வந்தருள் புரிவாயே;
அனகன்பெயர் நின்றுரு ளுந்திரி
புரமுந்திரி வென்றிட வின்புடன்
அழலுந்தந குந்திறல் கொண்டவர் புதல்வோனே-
அடல்வந்து முழங்கி யிடும்பறை
டுடுடுண்டுடு டுண்டுடு டுண்டென
அதிர்கின்றிட அண்ட நெரிந்திட வருசூர்;

மனமுந்தழல் சென்றிட வன்றவ
 ருடலுங்குட லுங்கிழி கொண்டிட
 மயில் *வென்றனில் வந்தரு ளுங்கன பெரியோனே-
மதியுங்கதி ருந்தட வும்படி
 யுயர்கின்ற வனங்கள் பொருந்திய
 வளமொன்று பரங்கிரி வந்தருள் பெருமானே. (க)

**3.** சருவும்படி †வந்தன னிங்கித
 மதனின்றிட அம்புலி யுஞ்சுடு
 தழல்கொண்டிட மங்கையர் கண்களின் வசமாகி-
சயிலங்கொளு மன்றல் பொருந்திய
 பொழிலின்பயில் தென்றலு மொன்றிய
 தடவஞ்சனை துன்றி யெழுந்திட திரமாவே;
இரவும்பக லந்தியு நின்றிடு
 குயில்வந்திசை தெந்தன வென்றிட
 இருகண்கள் துயின்றிட லின்றியும் அயர்வாகி-
இவனெஞ்சு ‡பதன்பத னென்றிட
 மயல்கொண்டுவ ருந்திய வஞ்சகன்
 இனியுன்றனம லர்ந்தில கும்பதம் அடைவேனோ;
திருவொன்றிவி ளங்கிய §அண்டர்கள்
 மனையின்தயி ருண்டவ னெண்டிசை
 திகழும்புகழ் கொண்டவன் ||வண்டமிழ் பயில்வோர்பின்-

---

*வென்=முதுகு.

†வந்தனன் என்பது வந்து என்னும் பொருளைத் தரும் முற்றெச்சம்.

‡ பதன்பத னென்றிட=பதைபதைக்க.

§ அண்டர்கள்=இடையர்கள்.

|| வண்டமிழ் பயில்வோர்பின் திரிகின்றவன் என்றது,

> "கணிவண்ணன் செல்கென்றான் காமருபூங் கச்சி
> மணிவண்ணா நீகிடக்க வேண்டாம்—துணிவொன்றிச்
> செந்நாப் புலவோன்யான் செல்கின்றேன் நீயுமுன்றன்
> பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்" என்ற திருமழிசை

யாழ்வார் பின் சென்றதை.

திரிகின்றவன் மஞ்சு நிறம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள வென்றடல்
ஜெயதுங்கமு குந்தன் மகிழ்ந்தருள் மருகோனே;
மருவுங்கடல் துந்துமி யுங்குட
முழவங்கள்கு மின்குமி னென்றிட
வளமொன்றிய செந்திலில் வந்தருள் முருகோனே-
மதியுங்கதி ரும்புய லுந்தின
மறுகும்படி அண்ட மிலங்கிட
வளர்கின்ற பரங்கிரி வந்தருள் பெருமாளே. (உ)

4. அருக்கு மங்கையர் மலரடி வருடியெ
கருத்த றிந்துபி னரைதனி லுடைதனை
அவிழ்த்து மங்குள அரசிலை தடவியு மிருதோளுற்-
றணைத்து மங்கையி னடிதொடு நகமெழ
வுதட்டை மென்றுப லிடுகுறி களுமிட
அடிக்க ளந்தனில் மயில்குயில் புறவென மிகவாய்விட்;
டுருக்கு மங்கியின் மெழுகென வுருகிய
சிரத்தை மிஞ்சிடு மறுபவ முறுபல
முறக்கை யின்கனி நிகரென இலகிய முலைமேல்வீழ்ந்-
துருக்க லங்கிமெ யுருகிட வமுதுகு
பெருத்த வுந்தியின் முழுகிமெ யுணர்வற
வுழைத்தி டுங்கன கலவியை மகிழ்வது தவிர்வேனோ;
இருக்கு மந்திர *மெழுவகை முநிபெற
வுரைத்த சம்ப்ரம சரவண பவகுக
இதத்த இங்கித மிலகிய அறுமுக எழில்வேளென்-
றிலக்க ணங்களு மியலிசை களுமிக
விரிக்கு மம்பல மதுரித கவிதனை
யியற்று செந்தமிழ் விதமொடு புயமிசை புனைவோனே;
செருக்கு மம்பல மிசைதனி லசைவுற
நடித்த சங்கரர் வழிவழி யடியவர்
திருக்கு ருந்தடி யருள்பெற அருளிய குருநாதர்-

---

*எழுவகை முநி=வசிஷ்டர் முதலிய சப்த ரிஷிகள்.

திருக்கு முந்தையு மென அவர் வழிபடு
குருக்க ளின்திற மெனவரு பெரியவ
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே. (௫)

**5.** உனைத்தி னந்தொழு திலனுன தியல்பினை
உரைத்தி லன்பல மலர்கொடு னடியிணை
உறப்ப ணிந்தில னொருதவ மிலனுன தருள்மாறு-
உளத்து ளன்பின ருறைவிட மறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும்வலம் வருகிலன்
உவப்பொடுன்புகழ்துதிசெயவிழைகிலன் மலைபோலே;
கனைத்தெ ழும்பக டதுபிடர் மிசைவரு
கறுத்த வெஞ்சின மறலித னுழையினர்
கதித்த டர்ந்தெறி கயிறடு கதைகொடு பொருபோதே-
கலக்கு றுஞ்செய லொழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தி லென்பய மறமயில் முதுகினில் வருவாயே;
வினைத்த லந்தனி லலைகைகள் குதிகொள
விழுக்கு டைந்துமெ யுகுதசை கழுகுண
விரித்த குஞ்சிய ரெனுமவு ணரையமர் புரிவேலா-
மிகுத்த பண்பயில் குயில்மொழி யழகிய
கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
விரைத்த சந்தன ம்ருகமத புயவரை யுடையோனே;
தினத்தி னஞ்சதுர் மறைமுநி முறைகொடு
புனற்சொ ரிந்தலர் பொதியவி ணவரொடு
சினத்தை நிந்தனை செயுமுநி வரர்தொழ மகிழ்வோனே-
தெனத்தெ னந்தன எனவரி யளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில்திகழ்
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே. (௬)

**6.** கறுக்கு மஞ்சன விழியிணை அயில்கொடு
நெருக்கி நெஞ்சற எறிதரு பொழுதொரு
கனிக்கு ளின்சுவை யமுதுகு மொருசிறு நகையாலே-

களக்கொ ழுங்கலி வலைகொடு விசிறியெ
மனைக்கெ ழுந்திரு மெனமன முருகவொர்
கவற்சி தொண்டிட மனைதனி லழகொடு கொடுபோகி;
நறைத்த பஞ்சணை மிசையினின் மனமுற
அணைத் †தகந்தனி லிணைமுலை யெதிர்பொர
நகத்த ழுந்திட அமுதிதழ் பருகியு மிடறாடே
நடித்தெ ழுங்குரல் குமுகுமு குமுவென
இசைத்து நன்கொடு மனமது மறுகிட
நழுப்பு நஞ்சன சிறுமிகள் துயரற அருள்வாயே;
நிறைத்த தெண்டிரை மொகுமொகு மொகுவென
வுரத்த ‡கஞ்சுகி முடிநெறு நெறுவென
நிரைத்த அண்டமு கடுகிடு கிடுவென வரைபோலும்
நிவத்த திண்கழல் நிசிசர ருரமொடு
சிரக்கொ டுங்குவை மலைபுரை தரவிரு
நிணக்கு ழம்பொடு குருதிகள் சொரிதர அடுதீரா;
திறற்க ருங்குழ லுமையவ ளருளுறு
புழைக்கை தன்கட கயமுக மிகவுள
சிவக்கொ ழுந்தன கணபதி யுடன்வரு மிளையோனே
சினத்தொ டுஞ்சம ணுதைபட நிறுவிய
பரற்கு ளன்புறு புதல்வநன் மணியுகு
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே. (ரு)

7. வடத்தை மிஞ்சிய புளகித வனமுலை
தனைத்தி றந்தெதிர் வருமிளை ஞர்களுயிர்
மயக்கி யைங்கணை மதனனை யொருஅரு மையினாலே
§வருத்தி வஞ்சக நினைவொடு மெலமெல
நகைத்து நண்பொடு ||வருமிரு மெனவுரை
வழுத்தி யங்கவ ரொடுசரு வியுமுடல் தொடுபோதே;

---

*களக் கொழுங் கலி = வளமான கண்டத் தொனி.
†ஆகம் என்பது அகம் எனத் திரிந்தது. ஆகம் = மார்பு.
‡கஞ்சுகி = பாம்பு; அதாவது, ஆதிசேஷன்.
§ வருத்தி = வருவித்து.
|| வரு மிரும் = வாரும் இரும்.

விடத்தை வென்றிடு படைவிழி கொடுமுள
மருட்டி வண்பொருள் கவர்பொழு தினின்மயல்
விருப்பெ னும்படி மடிமிசை யினில்விழு தொழில்தானே-
விளைத்தி டும்பல கணிகையர் தமதுபொய்
மனத்தை நம்பிய சிறியனை வெறியனை
விரைப்ப தந்தனி லருள்பெற நினைகுவ துளதோதான்;
குடத்தை வென்றிரு கிரியென எழில்தள
தளத்த கொங்கைகள் மணிவட மணிசிறு
குறக்க ரும்பின்மெய் துவள்புய னெனவரு வடிவேலா-
குரைக்க ருங்கடல் திருவணை யெனமுனம்
அடைத்தி லங்கையி னதிபதி நிசிசரர்
குலத்தொ டும்பட வொருகணை விடுமரி மருகோனே;
திடத்தெ திர்ந்திடு மசுரர்கள் பொடிபட
அயிற்கொ டும்படை விடுசர வணபவ
திறற்கு கன்குரு பரனென வருமொரு முருகோனே-
செழித்த தண்டலை தொருமில கியகுட
வளைக்கு லந்தரு தரளமு மிகுமுயர்
திருப்ப ரங்கிரி வளநகர் மருவிய பெருமாளே. (எ)

8. கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப் பயின்று
கடையில்வந்து தித்துக் குழந்தை வடிவாகி-
கழுவியங்கெ டுத்துச் சுரந்த
முலை *யருந்து விக்கக் கிடந்து
கதறியங்கை கொட்டித் தவழ்ந்து நடமாடி;
அரைவடங்கள் கட்டிச் சதங்கை
யிடுகுதம்பை பொற்சுட்டி தண்டை
யவையணிந்து முற்றிக் கிளர்ந்து வயதேறி-
அரிய பெண்கள் நட்பைப் புணர்ந்து
பிணியுழன்று சுற்றித் திரிந்த
தமையுமுன்க்ரு பைச்சித்த மென்று பெறுவேனோ;

---

*அருந்துவிக்க = அருத்த = ஊட்ட.

இரவி யிந்த்ரன் வெற்றிக் குரங்கி
னரச ரென்று மொப்பற்ற *வுந்தி
யிறைவ †னெண்கி னக்கர்த்த னென்றும் நெடுநீலன்-
எரிய தென்றும் ருத்ரற் சிறந்த
அநும னென்றும் ஒப்பற்ற அண்டர்
எவரு மிந்த வர்க்கத்தில் வந்து புனமேவ;
அரிய தன்ப டைக்கர்த்த ரென்று
அசுரர் தங்கி ளைக்கட்டை வென்ற
அரிமு குந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே-
அயனை யும்பு டைத்துச் சினந்து
உலக மும்ப டைத்துப் பரிந்து
அருள்ப ரங்கி ரிக்குட் சிறந்த பெருமாளே. (எ)

9. காதட ருங்கயல் கொண்டிசைந் தைம்பொறி
வாளிம யங்கம னம்பயந் தந்திருள்
கால்தர விந்துவி சும்பிலங் கும்பொழு தொருகோடி-
காய்கதி ரென்றொளிர் செஞ்சிலம் புங்கணை
யாழியு டன்கட கந்துலங் கும்படி
காமனெ டுஞ்சிலை கொண்டடர்ந் தும்பொரு மயலாலே;
வாது புரிந்தவர் செங்கைதந் திங்கித
மாக நடந்தவர் பின்திரிந் துந்தன
மார்பில ழுந்தவ ணைந்திடுந் துன்பம துழலாதே-
வாச மிகுந்தக டம்பமென் கிண்கிணி
மாலை கரங்கொளு மன்பர்வந் தன்பொடு
வாழ நிதம்புனை யும்பதந் தந்துன தருள்தாராய்;
போதி லுறைந்தருள் கின்றவன் செஞ்சிர
மீது தடிந்துவி லங்கிடும் புங்கவ
போத வளஞ்சிவ சங்கரன் கொண்டிட மொழிவோனே-

---

* உந்தி யிறைவன் = பிரமன்.

† எண் கினக் கர்த்தன் = கரடிமுகச் சேனைகட்குத் தளகர்த்த ராகிய அம் முகமுள்ள ஜாம்புவான்.

பூக முடன்திகழ் *சங்கினங் கொண்டகி
ரீவ மடந்தைபு ரந்தரன் தந்தருள்
பூவைக ருங்குற மின்கலந் தங்குப னிருதோளா;
நீதக மொன்றினர் வஞ்சகந் துஞ்சியி
டாதவர் சங்கரர் தந்ததென் பும்பல
சேர்நிரு தன்குல மஞ்சமுன் சென்றடு திறலோனே-
சீதள முந்தும ணந்தயங் கும்பொழில்
சூழ்தர விஞ்சைகள் வந்திறைஞ் சும்பதி
தேவர்ப ணிந்தெழு தென்பரங் குன்றுறை
பெருமாளே. (அ)

10. சந்ததம் பந்தத் தொடராலே-
சஞ்சலந் துஞ்சித் திரியாதே;
கந்தனென் றென்றுற் றுனைநாளும்-
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ;
† தந்தியின் கொம்பைப் புணர்வோனே-
சங்கரன் பங்கிற் சிவைபாலா;
செந்திலங் கண்டிக் கதிர்வேலா-
தென்பரங் குன்றிற் பெருமாளே. (க)

11. தடக்கைப் பங்கயங் கொடைக்குக் கொண்டல்தண்
டமிழ்க்குத் தஞ்சமென் றுலகோரைத்-
தவித்துச் சென்றிரந் துளத்திற் புண்படுந்
தளர்ச்சிப் பம்பரந் தனையூசற்;
கடத்தைத் துன்பமண் சடத்தைத் துஞ்சிடுங்
கலத்தைப் பஞ்சஇந் த்ரியவாழ்வைக்-
கணத்திற் சென்றிடந் திருத்தித் தண்டையங்
கழற்குத் தொண்டுகொண் டருள்வாயே;

---

* சங்கினங் கொண்ட = சங்கின் அம் (அழகு) கொண்ட; அல்லது, சங்கு இனம் கொண்ட.

† தந்தியின் கொம்பு=தெய்வயானை.

படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்-
பணித்துத் தம்பயந் தணித்துச் சந்தம்
பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா;
குடக்குத் தென்பரம் பொருப்பிற் றங்குமங்
குலத்திற் கங்கைதன் சிறியோனே-
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே. (கo)

**12.** **ப**தித்தசெஞ் சந்தப் பொற்குட நித்தம்
பருத்துயர்ந் தண்டத் திற்றலை முட்டும்
பருப்பதந் தந்தச் செப்பவை யொக்குந் தனபாரம்-
*படப்புயங் கம்பற் கக்கு கடுப்பண்
செருக்குவண் டம்பப் பிற்கய லொக்கும்
பருத்தகண் கொண்டைக் கொக்கு மிருட்டென்
றிளைஞோர்கள்;
துதித்துமுன் கும்பிட் டுற்ற துரைத்தன்
புவக்கநெஞ் சஞ்சச் சிற்றிடை சுற்றுந்
துகிற்கலைந் தின்பத் தூர்க்க மளிக்குங் கொடியார்பால்-
துவக்குணும் பங்கப் பித்த னவத்தன்
புவிக்குளென் சிந்தைப் புத்தி மயக்கந்
துறக்கநின் தண்டைப் பத்ம மெனக்கென் றருள்வாயே;
குதித்துவெண் சங்கத் தைச்சுற வெற்றுங்
கடற்கரந் தஞ்சிப் புக்க வரக்கன்
குடற்சரிந் தெஞ்சக் குத்தி விதிர்க்குங் கதிர்வேலா-
குலக்கரும் பின்சொற் றத்தை யிபப்பெண்
தனக்கு வஞ்சித்துப் †பொச்சை யிடைக்குங்
குகுக்குகுங் குக்குக் குக்குகு குக்குங் குகுகூகூ;

---

* படப் புயங்கம் பல் கக்கு கடு, பண் செருக்கு வண்டு, அம்பு, அப்பிற் கயல் எனப்பிரிக்க.

† பொச்சை யிடை = காட்டி னிடத்தில்.

திதித்திதிந் தித்தித் தித்தியெ னக்கொம்
பதிர்த்துவெண் சண்டக் கட்கம் விதிர்த்துந்
திரட்குவிந் தங்கட் பொட்டெழ வெட்டுங் கொலைவேடர்-
தினைப்புனஞ் சென்றிச் சித்த பெணைக்கண்
டுருக்கரந் தங்குக் கிட்டி யணைத்தொண்
டிருப்பரங் குன்றிற் புக்கு ளிருக்கும் பெருமாளே. (கக)

13. பொருப்புறுங் கொங்கையர் பொருட்கவர்ந் தொன்றிய
பிணக்கிடுஞ் சண்டிகள் வஞ்சமாதர்-
*புயற்குழன் றங்கமழ் அறற்குலந் தங்கவிர்
முருக்குவண் செந்துவர் தந்துபோகம்;
அருத்திடுஞ் சிங்கியர் தருக்கிடுஞ் செங்கய
லறச்சிவந் தங் †கையி லன்புமேவும்-
அவர்க்குழன் றங்கமு மறத்தளர்ந் தென்பய
னருட்பதம் பங்கய மன்புறுதோ;
மிருத்தணும் பங்கய னலர்க்கணன் சங்கரர்
விதித்‡தெனுங் கும்பிடு கந்தவேளே-
மிகுத்திடும் வன்சம ணரைப்பெருந் திண்கழு
மிசைக்கிடுஞ் செந்தமி ழுங்கவாயா;
பெருக்குதண் சண்பக வனத்திடங் கொங்கொடு
திறற்செழுஞ் சந்தகில் துன்றிநீடு-
தினைப்புனம் பைங்கொடி தனத்துடன் சென்றணை
திருப்பரங் குன்றுறை தம்பிரானே. (கஉ)

14. மன்றலங் கொந்துமிசை தெந்தனந் தெந்தனென
வண்டினங் கண்டுதொடர் குழல்மாதர்-
மண்டிடுந் தொண்டையமு துண்டுகொண் டன்புமிக
வம்பிடுங் கும்பகன தனமார்பில்;

---

* புயல் குழன்ற அம் கமழ் எனப் பிரிக்க.

† கையில் = கைப் பொருளில்.

‡ என்றும் என்பது எண்ணும் என மரீஇத் தொகுத்தல் விகார முற்றது.

ஒன்றதும் பொன்றுவிழி கன்றதுங் கங்குழைய
உந்தியென் கின்றமடு விழுவேனை-
உன்சிலம் புங்கனக தண்டையுங் கிண்கிணியும்
ஒண்கடம் பும்புனையும் அடிசேராய்;
பன்றியங் கொம்புகமட டம்புயங் கஞ்சுரர்கள்
பண்டையென் பங்கமணி பவர்சேயே-
பஞ்சரங் கொஞ்சுகிளி வந்துவந் தைந்துகர
பண்டிதன் தம்பியெனும் வயலூரா;
சென்றுமுன் குன்றவர்கள் தந்தபெண் கொண்டுவளர்
செண்பகம் பைம்பொன்மலர் செறிசோலை-
திங்களுஞ் செங்கதிரு மங்குலுந் தங்குமுயர்
தென்பரங் குன்றிலுறை பெருமாளே. (கச)

**15.** வரைத்தடங் கொங்கை யாலும்
வளைப்படுஞ் செங்கை யாலும்
மதர்த்திடுங் கெண்டை யாலு *மனைவோரும்-
வடுப்படுந் தொண்டை யாலும்
விரைத்திடுங் கொண்டை யாலும்
மருட்டிடுஞ் சிந்தை மாதர் வசமாகி;
எரிப்படும் பஞ்சு போல
மிகக்கெடுந் தொண்ட னேனும்
†இனற்படுந் தொந்த வாரி கரையேற-
இசைத்திடுஞ் சந்த பேத
மொழித்திடுந் தண்டை சூழும்
இணைப்பதம் புண்ட ரீக மருள்வாயே;
சுரர்க்குவஞ் சஞ்செய் சூர
னிளக்ரவுஞ் சந்த னோடு
துளக்கெழுந் தண்ட கோள மளவாகத்-

* அனைவோரும் வடுப்படுந் தொண்டை=பலராலும் வடுப்படுத்தப்படும் கொவ்வைக் கனி யொத்த இதழ்.

† இனற்படுந் தொந்த வாரி = துன்பப்படுகின்ற வினைத் தொடர் புள்ள பிறவிக் கடல்.

ஆரத்தியன் றிந்த்ர லோக
 மழித்தவன் சம்ப்ர தாயம்
 சுடப்பருஞ் சண்ட வேலை விடுவோனே;
செருக்கெழுந் தும்பர் சேனை
 துளக்கவென் றண்ட மூடு
 தெழித்திடுஞ் சங்க பாணி மருகோனே-
திணைப்புனஞ் சென்று லாவு
 குறத்தியின் பம்ப ராவு
 திருப்பரங் குன்ற மேவு பெருமாளே. (கச)

---

௨

இரண்டாவது

திருச்சீரலைவாய் என்கின்ற

## திருச்செந்தூர்.

---

[திருநெல்வேலியி லிருந்து 35-மைல். இங்குள்ள சமுத்திர தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து ஐந்து தலைகளில் ஒன்றிழந்த பிரம தேவனுக்கு அற்ற தலை கிடைத்ததாலும், பாண்டியராஜன் புத்திரி யாகிய அங்கசுந்தரி யென்பாளுக்குச் சாபத்தால் வந்த குதிரைமுகம் மாறி அழகிய முகம் கிடைத்ததாலும், அத் தீர்த்தத்துக்கு வத்ஞாம்ப தீர்த்தம் என்று பெயர். "சிகைத்தோகை" [51] என்னுங் கந்தரந்தாதிச் செய்யுளில் "மகள்வாசி கைத்தோ" என்பதன் பொருளைக் காண்க. "செந்திலை யுணர்ந் துணர்ந் துணர்வுற" [47], "கயிலைமலை யனைய செந்தில்" [51], "மகா புநிதந் தங்குஞ் செந்தில்" [95], என்னுந் திருப்புகழ்த் திருவாக் கால் இத் தலத்துப் பெருமை புலப்படும். "நஞ் செந்தின் மேய வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்" என்பது அப்பர் ஸ்வாமிகள் திருவாக்கு. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் "கந்தர் கலிவெண்பா" பாடின திருப்பதி. இதற்கு ஸ்தல புராணம் உண்டு.]

---

## கொங்கணகிரி.

[இது கோயமுத்தூர் ஜில்லா தாராபுரம் தாலூகாவில் திருப்பூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு 2-மைல் தூரத்தி லுள்ளது. சேலம் ஜில்லா ராசீபுரம் என வழங்கும் ராஜபுரத்துக்கு மேற்கு 3-மைல் தூரத்திலும் கொங்கணகிரி என்னும் மலை யொன் றிருக்கின்றது.]

**398.** ஐங்கரனை யொத்தமன மைம்புலம கற்றிவள
ரந்திபக லற்றநினை வருள்வாயே-
அம்புவித னக்குள்வளர் செந்தமிழ்வ ழுத்தியுனை
அன்பொடுது திக்கமன மருள்வாயே;
தங்கியத வத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திரவெ ளிக்குவழி யருள்வாயே-
தண்டிகைக னப்பவுசு எண்டிசைம திக்கவளர்
சம்ப்ரமவி தத்துடனெ யருள்வாயே;
மங்கையர்சு கத்தைவெகு இங்கிதமெ னுற்றமனை
முன்றனைநி னைத்தமைய அருள்வாயே-
மண்டலிக * ரப்பகலும் வந்தசுப ரகைகூபுரி
வந்தணைய புத்தியினை யருள்வாயே;
கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பருள்
கொண்டுஉட லுற்றபொரு ளருள்வாயே-
குஞ்சரமு கற்கிளைய கந்தனென வெற்றிபெறு
கோங்கணகி ரிக்குள்வளர் பெருமாளே.

---

* ராப்பகல் என்பது ரப்பகல் என்ருயிற்று.

## தீர்த்தமலை.

[இது சேலம் ஜில்லா மொரப்பூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு 8-மைல் தூரத்திலுள்ள ஹரூருக்கு வடகிழக்கு 9½-மைல். மலையடிவாரத்திலும் மலைமேலும் கோயில்கள் இருக்கின்றன. இதற்கு சைவ-எல்லப்பநாவலர் பாடிய ஸ்தலபுராணம் ஒன்றுண்டு.]

**399.** பாட்டி லுருகிலை கேட்டு முருகிலை
கூற்று வருவழி பார்த்து முருகிலை
* பாட்டை யநுதின மேற்று மறிகிலை தினமானம்-
பாப்ப ணியனருள் வீட்டை விழைகிலை
நாக்கி னுனிகொடு ஏத்த அறிகிலை
பாழ்த்த பிறவியி லேற்ற † மனதுநல் வழிபோக;
மாட்ட மெனுகிறை கூட்டை விடுகிலை
யேட்டின் விதிவழி யோட்ட மறிகிலை
பார்த்து மினியொரு வார்த்தை அறைகுவ
னிதுகேளாய்-
வாக்கு முனதுள நோக்கு மருளுவ
னேத்த புகழடி யார்க்கு மெளியனை
வாழ்த்த இருவினை நீக்கு முருகனை மருவாயோ;
ஆட்டி வடவரை வாட்டி யரவொடு
பூட்டி திரிபுர மூட்டி மறலியி
னோட்ட மறசர ணீட்டி மதனுடல் திருநீறாய்-
ஆக்கி மகமதை வீட்டி யொருவனை
ஆட்டின் முகமதை நாட்டி மறைமக
ளார்க்கும் வடுவுற வாட்டு முமையவ னருள்பாலா;
சீட்டை யெழுதிவை யாற்றி லெதிருற
ஓட்டி யழல்பசை காட்டி சமணரை
சீற்ற மொடுகழு வேற்ற அருளிய குருநாதா-

---

* பாட்டை=கஷ்டத்தை. † மனது=மனதே!

[கநகமலை.]

தீர்த்த எனதக *மேட்டை யுடனினை
ஏத்த அருளுட னோக்கி அருளுதி
தீர்த்த மலைநகர் காத்த சசிமகள் பெருமாளே.

கநகமலை.

[இடம் விளங்க வில்லை.]

**400.** அரிவையர்கள் தொடரு மின்பத்
துலகுநெறி மிகம ருண்டிட்
டடடெனன மனது நொந்திட் டயராமல்-
அநுதினமு முவகை மிஞ்சிச்
சுகநெறியை விழைவு கொண்டிட்
டவநெறியின் விழையு மொன்றைத் தவிர்வேனோ;
பரிதிமதி நிறைய நின்றொ
தெனவொளிரு முனது துங்கப்
படிவமுக மவைகள் கண்டுற் றகமேவும்-
படர்கள்முழு வதும கன்றிட்
பரிவினொடு துதிபு கன்றெற்
பதயுகள மிசைவ ணங்கற் கருள்வாயே;
செருவில்கு மசுரர் மங்கக்
குலகிரிகள் நடுந டுங்கச்
சிலுசிலென வலைகு லுங்கத் திடமான-
செயமுதவு மலர்பொ ருங்கைத்
தலமிலகு மயில்கொ ளுஞ்சத்
தியைவிடுதல் புரியு முன்பிற் குழகோனே;
கருணைபொழி கிருபை முந்தப்
பரிவினொடு கவுரி கொஞ்சக்
கலகலென வருக டம்பத் திருமார்பா-
கரிமுகவர் தமைய னென்றற்
றிடுமிளைய குமர பண்பிற்
கநககிரி யிலகு கந்தப் பெருமாளே.

---

* ஏட்டை = விருப்பம்.

## புகழிமலை.

[இடம் விளங்க வில்லை.]

**401.** மருவுமலர் வாச முறுகுழலி னாலும்
வரிவிழியி னாலு மதியாலும்-
மலையினிக ரான இளமுலைக ளாலு
மயல்கள்தரு மாதர் வகையாலும்;
கருதுபொரு ளாலு மனைவிமக வான
கடலலையில் மூழ்கி அலைவேனோ-
கமலபத வாழ்வு தரமயிலின் மீது
கருணையுட னேமுன் வரவேணும்;
அருமறைக ளோது பிரமன்முதல் மாலும்
அமரர்முனி ராசர் தொழுவோனே-
அகிலதல மோது நதிமருவு சோலை
அழகுபெறு போக வளநாடா;
பொருதவரு சூரர் கிரியுருவ வாரி
புனல்சுவற வேலை யெறிவோனே-
புகலரிய தான தமிழ்முனிவ ரோது
புகழிமலை மேவு பெருமாளே.

## பூம்பறை.

[இது கொடைக்கானலுக்கு மேற்கு 8-மைல் தூரத்திற் பழநிக்குத் தெற்கே வராககிரிமேல் இருக்கின்றது. பழநியிலிருந்து வராககிரி 4-மைல்; அப்பால் மலைமேற் பத்துமணிநேர பயணஞ் சென்றூற் பூம்பறையை யடையலாம்.]

**402.** மாந்தளிர்கள் போல வேய்ந்தவுடல் மாதர்
*வாந்தவிய மாக முறைபேசி
வாஞ்சைபெரு மோக சாந்திதர நாடி
வாழ்ந்தமனை தேடி உறவாடி;

* வாந்தவியமாக=பாந்தவியமாக.

[கொடுங்குன்றம்.]

வந்துமுலை மீது சாந்துபல பூசி
வங்குமிடை வாட விளையாடி-
எங்கிசைகள் மேவ *லாஞ்சனையி லாமல்
எய்ந்தவிலை மாதர் உறவாமோ;
பாந்தண்முடி மீது தாந்ததிமி தோதி
தாஞ்செகண சேசெ எனவோசை-
பாங்குபெறு தாள மேங்கநட மாடு
பாண்டவர்ச காயன் மருகோனே;
பூந்தளிர்கள் வீறு வேங்கைகள்ப லாசு
பூங்கதலி கோடி திகழ்சோலை-
பூந்தடமு லாவு கோம்பைகள்கு லாவு
பூம்பறையில் மேவு பெருமாளே.

## கொடுங்குன்றம்.

[பிரான்மலை யென்பதும் இதுவே. திருஞானஸம்பந்த ஸ்வாமிக ளுடைய பாடல்பெற்றது. இராமநாதபுரம் ஜில்லா சிவகங்கைக்கு 22-மைல் தூரத்திலுள்ள திருப்புத்தூர் என்னும் தேவாரம்பெற்ற ஸ்தலத்துக்கு வடமேற்கு 15-மைல். திருப்புத்தூர் தஞ்சைஜில்லா அறந்தாங்கி ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து 27-மைல்.]

**403.** அனங்க னம்பொன் றஞ்சுந் தங்குங் கண்களாலே-
அடர்ந்தெ ழும்பொன் குன்றங் கும்பங்
கொங்கையாலே;
முனிந்து மன்றங் கண்டுந் தண்டும் பெண்களாலே-
முடங்குமென்றன்றொண்டுங்கண்டின் றின்புறுதோ;
தெனந்தெ னந்தெந் தெந்தெந் தெந்தெந் தெந்தெனனெ-
செறிந்த டர்ந்துஞ் சென்றும் பண்பின் தும்பிபாடக்;
குனிந்தி லங்குங் கொம்புங் கொந்துந் துன்றுசோலை-
கொழுங்கோ டுந்திண் குன்றந் தங்குந் தம்பிரானே.

---

* லாஞ்சனை = லச்சை.

**404.** எதிர்பொருது கவிகடின கச்சுக்க ளும்பொருது
குத்தித்தி றந்துமலே
யிலைகளென வதிம்ருகம தப்பட்டு நின்றெழுகி
முத்துச்செ றிந்தவட
மெனு*நிகள மவையறவு தைத்திட்ட ணைந்துகிரி
னிற்கொத்து மங்குசநெ ருங்குபாகர்-
எதிர்பரவ உரமிசைது கைத்துக்கி டந்துடல்ப
தைக்கக்க டிந்துமிக
இரதிபதி மணிமவுலி யெற்றித்தி ரியம்பகனு
முட்கத்தி ரண்டிளகி
யிளைஞருயிர் கவளமென மட்டித்த சைந்தெதிர்பு
டைத்துச்சி னந்துபொரு கொங்கையானை;
பொதுவில்விலை யிடுமகளிர் பத்மக்க ரந்தழுவி
யொக்கத்து வண்டமளி
புகஇணைய வரிபரவு நச்சுக்க ருங்கயல்கள்
செக்கச்சி வந்தமுது
பொதியுமொழி பதறஅுள கக்கற்றை யுங்குலைய
முத்தத்து டன்கருணை தந்துமேல்வீழ்-
ப்துமைதரு கலவிவலை யிற்பட்ட ழுந்தியுயிர்
தட்டுப்ப டுந்திமிர
புணரியுத தியில்மறுகி மட்டற்ற இந்திரிய
சட்டைக்கு ரம்பையழி
பொழுதினிலும் அருள்முருக சுத்தக்கோ டேங்கிரியி
னிர்த்தச்ச ரணகமல மறந்திடேனே;
திதிதிதிதி திதிதிதிதி தித்தித்தி திந்திதிதி
தத்தத்த தந்ததத
தெததததெத தெததததெத தெத்தெததெ தெந்ததெத
திக்கட்டி கண்டிகட
ஜெகணசெண செணஜெகுத தெத்திந்த்ரி யந்திரித
தக்கத்த குந்தகுர்த திந்திதிதோ-

* நிகளம்=யானைகட்டுஞ் சங்கிலி.

[குன்றக்குடி]

திகுடதிகு தொகுடதொகு திக்கட்டி கண்டிகட
டக்கட்ட கண்டகட
டிடிடுடு டிடிடுடு டிக்கட்டி கண்டிகட
டுட்டுட்டு டுண்டுடு
திகுகுதிகு திகுகுகுகு திக்குத்தி குந்திகுகு
குக்குக்கு குங்குகுகு என்றுதாளம்;
முதிர்திமிலை காடிகையுபி டக்கைக்கொ டுந்துடியு
டுக்கைப்பெ ரும்பதலை
முழவுபல மொகுமொகென வொத்திக்கொ டும்பிரம
கத்திக்க ளும்பரவ
முகடுபுகு வெகுகொடிகள் பக்கத்தெ மூந்தலைய
மிக்கக்க வந்தநிரை தங்கியாட-
முதுகழுகு கொடிகருட னெக்கத்தி ரண்டுவர
வுக்ரப்பெ ருங்குருதி
முழுகியெழு பயிரவர்ந டித்திட்ட கண்டமும்வெ
டிக்கத்து ணிந்ததிர
முடுகிவரு நிசிசரரை முட்டிச்சி ரந்திருகி
வெட்டிக்க ளம்பொருத தம்பிரானே. (உ)

# குன்றக்குடி.

[இது இராமநாதபுரம் ஜில்லா திருப்புத்தூருக்குக் கிழக்கு 7-மைல். தேவகோட்டைக்கு மேற்கு 15-மைல். இது மயூரகிரி எனவும் பெயர் பெறும். மலை சிறிது; வலம் வரலாம். ஸ்வாமி ஆறு திருமுகங்க ளுடையவர். இதற்கு ஸ்தல புராணம் உண்டு.]

**405.** அழகெ றிந்த சந்த்ர முகவ டங்க லந்த
அமுத புஞ்ச இன்சொல் மொழியாலே-
அடிது வண்ட தண்டை கலிலெ லுஞ்சி லம்பொ
டணிச தங்கை கொஞ்சு நடையாலே;

சுழியெ றிந்து நெஞ்சு சுழல நஞ்ச ணைந்து
தொடுமி ரண்டு கண்க ளதனாலே-
துணைநெ ருங்கு கொங்கை மருவு கின்ற பெண்கள்
துயரை யென்றொ ழிந்து விடுவேனோ;
எழுது *கும்ப கன்பி னிளைய தம்பி நம்பி
யெதிர டைந்தி றைஞ்சல் புரிபோதே-
இதம கிழ்ந்தி லங்கை யசுர ரந்த ரங்க
மொழிய வென்ற கொண்டல் மருகோனே;
மழுவு கந்த செங்கை அரனு கந்தி றைஞ்ச
†மனுவி யம்பி நின்ற குருநாதா-
வளமி குந்த குன்ற நகர்பு ரந்து துங்க
மலைவி ளங்க வந்த பெருமாளே. (க)

**406.** ‡ககுபநிலை குலையவிகல் மிகுபகடின் வலியுடைய
தந்தத்தி னைத்தடிவ தொந்தத் திரத்தையுள
அகிலமறை புகழ்பரமர் ஞெகிழிகல கலகலெனும்
அம்பொற் பதத்தர்தனு வம்பொற் பொருப்படர்வ
களபபரி மளமெழுகும் எழில்முழு குவமுளரி
யஞ்சப் புடைத்தெழுவ வஞ்சக் கருத்துமத
னபிஷேகங்-
கடிவபடு கொலையிடுவ கொடியமுக படமணிவ
வின்பச் சுடர்க்கனக கும்பத் தரச்செருவ
பிருகில்புள கிதசுகமு மிருதுளமும் வளரிளைஞர்
புந்திக் கிடர்த்தருவ பந்தித் தகச்சடர்வ
கயல்மகர நிகரமிக வியன்மருவு நதியில்முதிர்
சங்கிப்பி முத்தணிவ பொங்கிக் கனத்தொளிர்வ
முலைமாதர்;
வகுளமலர் குவளையிதழ் தருமணமு மிருகமத
மொன்றிக்க ருத்தமுகில் வென்றிட்டு நெய்த்தகுழ
லசையருசி யமுர்தக்ருத வசியமொழி மயில்குயிலெ
னும்புட் குரற்பகர வம்புற்ற மற்புரிய

* கும்பகன்பின் இளைய தம்பி=கும்பகர்ணன் தம்பியாகிய விபீஷணன். † மனு=மந்திரம். ‡ ககுபம்=திசை.

[குன்றக்குடி.]

வருமறலி யாணமொடு முடுகுசமர் விழியிணைகள்
கன்றிச் சிவக்கமகிழ் நன்றிச் சமத்துாக
றுதிரேகை-
வகைவகைமெ யுறவளைகள் கழலவிடை துவளவித
ழுண்டுட்ப ரிக்கநகை கொண்டுற் றணைத்தவதி
செறிகல்வி வலையிலென தறிவுடைய கலைபடுத
லுந்திப் பிறப்பறநி னைந்திட்ட முற்றுனடி
வயலிநகர் முருகசெரு முயல்பனிரு கரகுமர
துன்றட்ட சிட்டகுண குன்றக் குடிக்கதிப
அருளாதோ;

தகுகுதகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு
தங்குத் தகுத்தகுகு திங்குத் திகுத்திகிகு
சகணசக சகசகண செகணசெக செகசெகெண
சங்கச் சகச்சகண செங்கச் செகச்செகண
தனனதன தனதனன தெனனதென தெனதெனன
தந்தத்த னத்தனன தெந்தத்தெ னத்தெனன
தனனென-
தகுததகு தகுதகுதி திகுதிதிகு திகுதிகுதி
தங்குத் தகுத்தகுகு திங்குத் திகுத்திகுகு
டணணடண டணடணண டிணிணிடிணி டிணிடிணிணி
டண்டட் டடட்டடண டிண்டிட் டிடிட்டிடிணி
தாரதார தாரதார திரிரிதிரி திரிதிரிரி
தன்றத் தாத்தார தின்றித் திரித்திரிரி
யெனதாளந்;

தொகுதிவெகு முரசுகர டிகைடமரு முழவுதவில்
தம்பட்ட மத்தளமி னம்பட் டடக்கைபறை
பதலைபல திமிலைமுத ,லதிரவுதிர் பெரியதலை
மண்டைத் திரட்பருகு சண்டைத் திரட்கழுகு
துடர்கிபிட கருடனடர் தரகாட மொகுமொகென
வந்துற் றிடக்குடர்நி ணந்துற் றிசைத்ததிர
முதுபேய்கள்-

சனகனரி நெறுநெறெனை விளிதினிது தினவினைசெய்
வெங்குக் குடத்தகொடி துங்குக் குகுக்குகென
வடனமிடு இசைபரவி நடனமிட வடவிரவி
திங்கட்ப்ர பைக்கதிர்கள் மங்கப்ப்ர சித்தகுல
துரககஜ ரதகட்க முரணரண நிருதர்விறல்
மிண்டைக் குலைத்தமர்செய் தண்டர்க் குரத்தையருள்
பெருமாளே. (உ)

**407.** கடினதட கும்ப நேரென
வளருமிரு கொங்கை மேல்விழு
கலவிதரு கின்ற மாதரொ டுறவாடிக்-
கனவளக பந்தி யாகிய
நிழல்தனிலி ருந்து தேனுமிழ்
கனியிதழை மென்று தாடனை செயலாலே;
துடியிடைது டங்க வாள்விழி
குழைபொரநி ரம்ப மூடிய
துகில்நெகிழ வண்டு கோகில மயில்காடை-
தொனியெழவி ளைந்து கூரிய
கொடுநகமி சைந்து தோள்மிசை
துயிலவச இன்ப மேவுத லொழிவேனோ;
இடிமுரச றைந்து பூசல்செய்
அசுரர்கள்மு றிந்து தூளெழ
எழுகடல்ப யந்து கோவென அதிகோப-
எமபடரு மென்செய் வோமென
நடுநடு டுங்க வேல்விடு
இரணமுக சண்ட மாருத மயிலோனே;
வடிவுடைய அம்பி காபதி
கணபதிசி றந்து வாழ்தட
வயலிநகர் குன்ற மாநக ருறைவோனே-
வகைவகைபு கழ்ந்து வாசவன்
அரிபிரமர் சந்த்ர சூரியர்
வழிபடுதல்கண்டு வாழ்வருள் பெருமாளே.

[குன்றக்குடி.]

**408.** நேசா சாரா டம்பர மட்டைகள்
பேசா தேயே சுங்கள மட்டைகள்
நீசா ளோடே யும்பழ கிக்கவர் பொருளாலே-
நீயே நானே யென்றொரு சத்தியம்
வாய்கூ சாதோ துங்க படத்திகள்
நேரா லேதா னின்றுபி லுக்கிகள் எவர்மேலும்;
ஆசா பாசா தொந்தரை யிட்டவர்
மேல்வீழ் வார்பால் சண்டிகள் கட்டழ
காயே மீதோ லெங்கு மினுக்கிகள் வெகுமோகம்-
ஆகா தாவே சந்தரு திப்பொழு
தோகோ வாவா வென்று பகட்டிக
ளாகா மோகா வம்பிகள் கிட்டிலு முறவாமோ;
பேசா தேபோய் நின்றுறி யிற்றயிர்
வாயா வாவா வென்று குடித்தருள்
பேரா லேநீள் கஞ்சன் விடுத்தெதிர் வருதூது-
பேழ்வாய் வேதா ளம்பக டைப்பகு
வாய்நீள் மாறு ளுஞ்சர ளத்தொடு
பேயாளுள்போர்வென்றெதிரிட்டவன் மருகோனே;
மாசூ டாடா டும்பகை யைப்பகை
சூரா ளோடே வன்செரு வைச்செறு
மாசூராபாரெங்குமருட்பொலி முருகோனே
வாளு டேழ்நா டும்புகழ் பெற்றிடு
தேனு றேகும் துங்க மலைப்பதி
மாயூ ராவாழ் குன்றை தழைத்தருள் பெருமாளே. ()

**409.** பிறர்புக ழின்சொற் பயிலுமி ளங்கைப்
பருவம தன்கைச் சிலையாலே-
பிறவித ருஞ்சிக் கதுபெரு கும்பொய்ப்
பெருவழி சென்றக் குணமேவிச்;
சிறுமைபொ ருந்திப் பெருமைமு டங்கிச்
செயலும ழிந்தற் பமதான-

தெரிவையர் தங்கட் கயலைவி ரும்பிச்
சிலசில பங்கப் படலாமோ;
கெறுவித வஞ்சக் கபடமொ டண்டிக்
கிலுமெதிர் சண்டைக் கெழுசூரன்-
கிளையுடன் மங்கத் தலைமுடி சிந்தக்
கிழிபட துன்றிப் பொருதோனே;
குறுமுநி யின்பப் பொருள்பெற அன்றுற்
பன மனு வுஞ்சொற் குருநாதா-
குலகிரி தூங்கக் கிரியுயர் குன்றக்
குடிவளர் கந்தப் பெருமாளே. (௩)

**410.** தவள மதிய மெறிக்குந் தணலாலே-
சரச மதனன் விடுக்குங் கணையாலே;
கவன மிகவு முரைக்குங் குயிலாலே-
கருதி மிகவு மயக்கம் படவோநான்;
பவள நிகரு மிதழ்ப்பைங் குறமானின்-
பரிய வரையை நிகர்க்குந் தனமேவுந்;
திவளு மணிகள் கிடக்குந் திருமார்பா-
திகழு மயிலின் மலைக்கண் பெருமாளே. (௩)

**411.** நாமேவு குயிலாலு மாமார னயிலாலு
நாடோறு மதிகாயும் வெயிலாலும்-
நார்மாதர் வசையாலும் வேயூது மிசையாலு
நாடாசை தருமோக வலையூடே;
ஏமாறி முழுநாளு மாலாகி விருதாவி
லேவாரும் விழிமாதர் துயரூடே-
ஏகாம லழியாத மேலான பதமீதி
லேகியு னுடன்மேவ அருள்தாராய்;
தாமோத முடனூறு பால்தேடி யுரலோடு
தானேறி விளையாடு மொருபோதில்-
தாயாக வருசோதை காணாது களவாடு
தாமோத ரன்முராரி மருகோனே;

[பொதியமலை.]

மாமாது வனமாது கார்மேவு சிலைமாது
　　மாலாகி விளையாடு　　புயவீரா-
வாணுடு புகழ்நாடு தேனூறு புடைசூழு
　　மாயூர கிரிமேவு　　பெருமாளே. (எ)

## பொதியமலை.

[இது திருநெல்வேலி ஜில்லாவி லுள்ளது.]

**412.** மைக்க ணிக்கன் வாளி போல
　　வுட்க ளத்தை மாறி நாடி
　　மட்டு முற்ற கோதை போத　　முடிசூடி-
　மத்த கத்தி னீடு கோடு
　　வைத்த தொத்தின் மார்பி னூடு
　　வட்ட மிட்ட வாரு லாவு　　முலைமீதே;
* இக்கு வைக்கு மாடை வீழ
　　வெட்கி யக்க மான பேரை
　　யெத்தி முத்த மாடும் வாயி　　னிசைபேசி-
　எட்டு மட்ட மாதர் பாய
　　லிச்சை யுற்றெ னாக மாவி
　　யெய்த்து நித்த மான வீன　　முறலாமோ;
துர்க்கை † பக்க சூல காளி
　　‡ செக்கை புக்க தாள வோசை
　　தொக்க திக்க தோத தீத　　வெனவோதச்-
சுற்றி வெற்றி யோடு தாள்கள்
　　சுத்த நிர்த்த மாடு மாதி
　　சொற்கு நிற்கு § மாறு தார　　மொழிவோனே;

* இக்கு=தடை. † பக்க=பகுப்புற்ற; முக்கிளையாகப் பிரிந்த.
‡ செக்கை=செங்கை. § மா றுதாரம்=மறு உத்தரம்.

திக்கு மிக்க வானி னூடு
புக்க விக்க மூடு சூரர்
* திக்க முட்டி யாடு தீர வடிவேலா-
செச்சை பிச்சி மாலை மார்பு
விச்சை கொச்சை மாதி னோடு
† செப்பு வெற்பில் சேய தான பெருமாளே.

**413.** ‡வெடித்த வார்குழல் விரித்து வேல்விழி
விழித்து மேகலை பதித்து வார்தொடு
மிகுத்த மாமுலை யசைத்து நூலின்ம ருங்கினுடை-
மினுக்கி யோலைகள் பிலுக்கி யேவளை
தலுக்கி யேவிள நகைத்து கிழ்விழி
மிரட்டி யாரையு மழைத்து மால்கொடு
தந்தவாய்நீர்;

குடித்து நாயென முடக்கு மேல் §பிணி
யடுத்து பாதிகள் படுத்த தாய்தமர்
குலத்தர் யாவரு நகைக்க வேயுடல் மங்குவேனைக்-
குறித்து நீயரு கழைத்து மாதவர்
கணத்தின் மேலென அளித்து வேல்மயில்
கொடுத்து வேதமு மொருத்த னுமென
சிந்தைகூராய்;

உடுட்டு டுடுடு டுடுட்டொ டோவென
திகுத்த தீதிகு திகுர்த்த தாவென
உடுக்கை பேரிகை தவிற்கு ழாமுமி ரங்குபோரில்-
உலுத்த நீசர்கள் பதைப்ப மாகரி
துடிப்ப நீள்கட லெரித்து சூர்மலை
யுடைத்து நீதிகள் பரப்பி யேயவ ரும்பராரை;

---

* திக்க=பலவழியாச் சிதற.

† செப்பு வெற்பு என்பது பொதிய மலை; 'செம்புடற் பொதிந்த தெய்வப் பொதியமும்' [கல்லாடம்-65].

‡ வெடித்த=நறுமணங் கமழ்கின்ற.

§ பிணி அடுத்து-உபாதிகள் படுத்த எனப் பிரிக்க.

[கழுகுமலை.]

அடைத்த மாசிறை விடுத்து வானுலை
களிக்கு மாயிர திருக்க ணுனர
சளித்து நாளுமெ னுளத்தி லேமகி ழுங்குமாரா-
அளித்த தாதையு மிகுத்த மாமனும்
அனைத்து ளோர்களு மதிக்க வேமகிழ்
அகத்ய மாமுநி பொருப்பின் மேவிய
தம்பிரானே. (௨)

## கழுகுமலை.

[இது திருநெல்வேலிக்கு வடக்கு 28-மைல். நல்லத்தம்புத்தூர் ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து 9-மைல்.]

414. குதலை மொழியினர் நிதிக்கொள் வாரணி
முலையை விலைசெய்வார் தமக்கு மாமயல்
கொடிது கொடிததால் வருத்த மாபுறு துயராலே-
மதலை மறுகிவா விபத்தி லேவெகு
பதகர் கொடியவா ளிடத்தி லேமிக
வறுமைபுகல்வதே யெனக்குமோஇனி முடியாதே;
முதல வரிவிலோ டெதிர்த்த சூருடல்
மடிய அயிலையே விடுத்த வா கரு
முகிலை யனையதா நிறத்த மால்திரு மருகோனே-
கதலி கமுகுசூழ் வயற்கு ளேயளி
யிசையை முரலமா வறத்தில் மீறிய
கழுகு மலைமகா நகர்க்குள் மேவிய பெருமானே. (௧)

415. முலையை மறைத்துத் திறப்ப ராடையை
நெகிழ வுடுத்துப் படுப்பர் வாயிதழ்
முறைமுறை முத்திக் கொடுப்பர் பூமல ரணைமீதே-

அலைகுலை யக் * கொட் டணைப்ப ராடவர்
மனவலி யைத்தட் டழிப்பர் மால்பெரி
தவர்பொரு ளைக்கைப் பறிப்பர் வேசைக
ளுறவாமோ;

தலைமுடி பத்துத் தெறித்து ராவண
னுடல்தொளை பட்டுத் துடிக்க வேயொரு
தநுவை வளைத்துத் தொடுத்த வாளியன்
மருகோனே-

கலைமதி யப்புத் தரித்த வேணிய
ருதவிய வெற்றித் திருக்கை வேலவ
கழுகு மலைக்குட் சிறக்க மேவிய பெருமாளே. (௨)

**416.** கோங்க முகையு மெலிய வீங்கு புளக களப
மேந்து குவடு குழையும் படிகாதல்-
கூர்ந்து குழையை அமளி தோய்ந்து குலவு மினிய
தேங்கு கலவி யமுதுண் டியல்மாதர்;

வாங்கு பகழி விழியை மோந்து பகலு மிரவும்
வாய்ந்த துயிலை மிகவுந் தணியாத-
வாஞ்சை யுடைய அடிமை நீண்ட பிறவி யலையை
நீந்தி அமல அடிவந் தடைவேனோ;

ஓங்க லனைய பெரிய † சோங்கு தகர மகர
மோங்கு ததியின் முழுகும் பொருசூரும்-
ஓய்ந்து பிரமன் வெருவ வாய்ந்த கழுகு மலையில்
ஊர்ந்து மயில துலவுந் தனிவேலா;

வேங்கை யடவி மறவர் ஏங்க வனிதை யுருக
வேங்கை வடிவு மருவுங் குமரேசா-
வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டு மளவி லுதவும் பெருமாளே. (௩)

---

* கொட்டணைப்பர் = கொண்டணைப்பர். † சோங்கு = கப்பல்.

## வள்ளியூர்.

[இது திருநெல்வேலி ஜில்லா நாங்குநேரி தாலூகா கஸ்பா நாங்குநேரிக்குத் தென் கிழக்கு 5-மைல். கோயில் மலைமேலிருக்கின்றது. சுப்பிரமணிஸ்வாமி ஸந்நிதி விசேடமானது. கோயிலுக் கருகில் இரண்டு அழகிய திருக் குளங்கள் உள்ளன. சித்திரைமாத உற்சவத்தில் அநேகங் காவடிகள் வருகின்றன.]

**417.** அல்லில் நேருமி னதுதானும்-
அல்ல தாகிய உடல்மாயை;
கல்வி னோரது வழிதோறுங்-
கையு நாளுமு லையலாமோ;
சொல்லி நேர்படு முதுசூர்-
தொய்ய லூர்கெட விடும்வேலா;
வல்லி மாரிரு புறமாக-
வள்ளி யூருறை பெருமாளே.

## கதிர்காமம்.

[இஃது ஈழநாட்டி லுள்ளது; சிலோன் கவெர்ன்மென்ட் ரெயில்வே மாத்தளை ஸ்டேஷனி லிருந்து வட கிழக்கு சுமார் 75-மைல்.]

**418.** திருமக ளுலாவு மிருபுய முராரி
திருமருக நாமப் பெருமாள்காண்-
ஜெகதலமும் வானு மிகுதிபெறு பாடல்
தெரிதரு குமாரப் பெருமாள்காண்;
மருவுமடி யார்கள் மனதில்விளை யாடு
மரகதம யூரப் பெருமாள்காண்-
மணிதரளம் வீசி யணியருவி சூழ
மருவுகதிர் காமப் பெருமாள்காண்;

அருவரைகள் நீறு படஅசுரர் மாள
அமர்பொருத வீரப் பெருமாள்காண்-
அரவுபிறை வாரி விரவுசடை வேணி
அமலர்குரு நாதப் பெருமாள்காண்;
இருவினையி லாத தருவினைவி டாத
இமையவர்கு லேசப் பெருமாள்காண்-
இலகுசிலை வேடர் கொடியினதி பார
இருதனவி நோதப் பெருமாளே. (௧)

**419.** * அலகின் மாறு மாறுத †கலதி பூத வேதாளி
அடைவில் ‡ ஞாளி கோமாளி அறமீயா-
அழிவு கோளி நாணாது புழுகு பூசி வாழ் மாதர்
அருளி லாத தோடோய மருளாகிப்;
பலக லாக ரா மேரு மலைக ராச லா வீசு
பருவ மேக மே தாரு வெனயாதும்-
பரிவு றாத மா பாதர் வரிசை பாடி யோ யாத
பரிசில் தேடி மா யாத படிபாராய்;
இலகு வேலை நீள் §வாடை யெரிகொள் வேலை மா சூரி
லெறியும் வேலை மா றாத திறல்வீரா-
இமய மாதுபா கீர திநதி பால கா சார
விறைவி கான மால் வேடர் சுதைபாகா;
கலக வாரி போல் மோதி வடவை யாறு சூழ் சீத
கதிர காம மூ தூரி லிலையோனே-
கனக நாடு வீ டாய கடவுள் யானை வாழ்வான
கருணை மேரு வே தேவர் பெருமாளே. ()

**420.** உடுக்கத் துகில்வேணு நீள்பசி
யவிக்கக் கனபானம் வேணுநல்
ஒளிக்குப் புனலாடை வேணுமெய் யுறுநோயை-
ஒழிக்கப் பரிகாரம் வேணுமுள்
இருக்கச் சிறுநாரி வேணுமோர்
படுக்கத் தனிவீடு வேணுமிவ் வகையாவும்;

---

* அலகின்மாறு = விளக்குமாறு. † கலதி = மூதேவி.
‡ ஞாளி = நாய். § வாடை யெரி = வடவாமுகாக்கினி.

[கதிர்காமம்.]

கிடைத்துக் கருஹறவாகி யாகிய
மயக்கக் கடலாடி நீடிய
கிளைக்குப் பரிபால னாயுயி ரவமேபோம்-
க்ருபைச்சித் தமுஞான போதமு
மழைத்துத் தரவேணு மூழ்பவ
கிரிக்குட் சுழல்வேலை யாளுவ தொருநாளே;

குடக்குச் சிலதூதர் தேடுக
வடக்குச் சிலதூதர் நாடுக
குணக்குச் சிலதூதர் தேடுக வெனமேவிக்-
குறிப்பிற் குறிகாணு மாருதி
யினித்தெற் கொருதூது போவது
குறிப்பிற் குறிபோன போதிலும் வரலாமோ;

அடிக்குத் திரகார ராகிய
வரக்கர்க் கிளையாத தீரனு
மலைக்கப் புறமேவி மாதுறு வனமேசென்-
றருட்பொற் றிருவாழி மோதிர
மளித்துற் றவர்மேல் மனோகர
மளித்துக் கதிர்காம மேவிய பெருமாளே.* (௧)

**421.** எதிரி லாத பத்தி தனைமேவி-
இனிய தாணி னைப்பை யிருபோதும்;
இதய வாரி திக்கு ஞுறவாகி-
எனது ளேசி றக்க அருள்வாயே;
கதிர காம வெற்பி லுறைவோனே-
கனக மேரு வொத்த புயவீரா;
மதுர வாணி யுற்ற கழலோனே-
வழுதி கூனி மிர்த்த பெருமாளே. (௨)

---

* கதிர்காமத்து முருகபிரான் ஹநுமாருக் கருளிய ஐதிஹ்யங் குறிக்கப்பட் டிருக்கின்றது போலும்.

**422.** கிடகட கருவிகள் தப *வகி ரதிர்கதிர்
காமத் தரங்க மலைவீரா-
கன † கத நககுலி புணரித குணருக
‡ காமத் தனஞ்சம் புயனோட;
வடசிக ரகிரித விடுபட நடமிடு
மாவிற் புகுங்கந் தவழாது-
வழிவழி தமரென வழிபடு கிலனென
வாவிக் கினம்பொன் றிடுமோதான்;
அடவியி ருடியபி நவகும ரியடிமை
யாயப் புனஞ்சென் றயர்வோனே-
அயிலவ சமுடன தநிதிரி தருகவி
யாளப் புயங்கொண் டருள்வோனே;
இடமொரு மரகத மயில்மிசை வடிவுள
ஏழைக் கிடங்கண் டவர்வாழ்வே-
இதமொழி பகரினு மதமொழி பகரினு
மேழைக் கிரங்கும் பெருமாளே. (௫)

**423.** சமரமுக வேலொத்த விழிபுரள வாரிட்ட
தனமசைய வீதிக்குள் மயில்போ லுலாவியே-
சரியைக்ரியை யோகத்தின் வழிவருக்கு பாசுத்தர்
தமையுமார ராகத்தின் வசமாக மேவியே;
உமதடியு ளுருக்கு மனுமரண மாயைக்கு
முரியவர் மகாதத்தை யெனுமாய மாதரார்-
ஒளிரமணி பீடத்தி லமடுபடு வேனுக்கு
முனதருள்க்ரு பாசித்த மருள்கூர வேணுமே;
இமகிரிகு மாரத்தி யறுபவைப ராசத்தி
யெழுதரிய காயத்ரி யுமையாள்கு மாரனே-

---

* வகிர் = கீற்றுக்களை யுடைய புலி.

† கத நகம் = கோபத்தையுடைய மலையையொத்த யானை.

‡ காம அத்தன் = மன்மதன் பிதாவாகிய விஷ்ணு. 'காமத்தன் அஞ்ச அம்புயன் ஓட' எனப் பிரிக்க.

[கதிர்காமம்.]

எயினர்மட மானுக்கு மடலெழுதி மோகித்து
இதணருகு சேவிக்கு முருகாவி சாகனே;
அமரர்சிறை மீள்விக்க அமர்செய்துப்ர தாபிக்கு
மதிகவித சாமர்த்ய கவிராஜ ராஜனே-
*அழுதுலகை வாழ்வித்த கவுணியகு லாதித்த
அரியகதிர் காமத்தி லுரியாபி ராமனே.(௬)

**424.** சாத்தே யுதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா யெதிர்த்தே வருசூரைச்-
சரிப்போன மட்டே விடுத்தா யடுத்தாய்
தகர்த்தா யுடற்று ணிருகூறச்;
சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்
செகுத்தாய் பலத்தார் விருதாகச்-
சிறைச்சேவல் பெற்றாய் †வலக்கார முற்றாய்
திருத்தா மரைத்தா ளருள்வாயே;
புரத்தார் ‡வரத்தார் சரச்சே கரத்தார்
பொரத்தா னெதிர்த்தே வருபோது-
பொறுத்தார் பரித்தார் சிரித்தா ரெரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேயின்;
கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார்
கருத்தார் §மருத்தூர் மதனுரைக்-
கரிக்கோல மிட்டார் ||கணுக்கான முத்தே
கதிர்க்காம முற்றார் முருகோனே. (௭)

---

* இக்கருத்தை

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்."—

என்னும் பெரியபுராணத் திருவிருத்தத்திற் காண்க.

† வலக்காரம்=வலம், வென்றி. ‡வரத்தார்=வரப்பிரசாதிகள்.

§ மருத்து ஊர்=தென்றற்காற் றாகிய தேரை நடத்தும்.

|| கணுக் கான=கண்ணுக் கான.

**425.** சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய-
சமயபே தத்தினுக் கணுகொணு மெய்ப்பொருட்
டருபரா சத்தியிற் பரமான;
துரியமே லற்புதப் பரமஞா னத்தனிச்
சுடர்வியா பித்தநற் பதிநீடு-
துகளில்சா யுச்சியக் கதியையீ றற்றசொற்
சுகசொரூ பத்தையுற் றடைவேனோ;
புரிசைசூழ் செய்ப்பதிக் குரியசா மர்த்யசற்
புருஷவீ ரத்துவிக் ரமசூரன்-
புரளவேல் தொட்டகைக் குமரமேன் மைத்திருப்
புகழையோ தற்கெனக் கருள்வோனே;
*கரியபூ கத்திரட் பலவின்மீ திற்சுளைக்
கனிகள்பீ றிப்புசித் தமராடிக்-
கதலிசூ தத்தினிற் பயிலுமீ ழத்தினிற்
கதிரகா மக்கிரிப் பெருமாளே. (அ)

**426.** **பா**ரவித முத்தப்ப டாபுள கப்பொற்ப
யோதர நெருக்குற்ற இடையாலே-
பாகளவு தித்தித்த கீதமொழி யிற்புட்ப
பாணவிழி யிற்பொத்தி விடுமாதர்;
காரணி குழற்கற்றை மேல்மகர மொப்பித்த
காதில்முக வட்டத்தி லதிமோக-
காமுகன கப்பட்ட வாசையைம றப்பித்த
கால்களைம றக்கைக்கும் வருமோதான்;
தேரிரவி யுட்கிப்பு காமுதுபு ரத்திற்றெ
சாசிரனை மர்த்தித்த அரிமாயன்-
சீர்மருக அத்யுக்ர யானைபடும் ரத்நத்ரி
கோணசயி லத்துக்ர கதிர்காம;

* கரிய பூகம் = கருங் குரங்கு.

[கதிர்காமம்.]

வீரபுன வெற்பிற்க லாபியெயி னச்சிக்கு
மேகலை யிடைக்கொ த்தி னிருதாளின்-
*வேரிமழை யிற்†பச்சை வேயிலரு ணக்கற்றை
வேல்களி லகப்பட்ட பெருமாளே. (௯)

**427.** **ம**ருவரு வெற்றி மலர்தொடா விற்கை
வலிசெயா நிற்கு மதனாலும்-
மதில்கள்தா வுற்ற கலைபடா வட்ட
மதிசுடா நிற்கு மதனாலும்;
இருகணால் முத்த முதிரயா மத்தி
னிரவினால் நித்த மெலியாதே-
இடருறு மெத்த மயல்கொளா நிற்கு
மிவளைவாழ் விக்க வரவேணும்;
கரிகள்சேர் வெற்பி லரியவே டிச்சி
கலவிகூர் சித்ர மணிமார்பா-
கனகமா ணிக்க வடிவனே மிக்க
கதிரகா மத்தி லுறைவோனே;
முருகனே பத்த ரருகனே முத்தி
முதல்வனே பச்சை மயில்வீரா-
முடுகிமே விட்ட கொடியசூர் கெட்டு
முறியவேல் தொட்ட பெருமாளே. (௧0)

**428.** **மா**தர்வச மாயுற் றுழல்வாரும்-
மாதவமெ னாமற் றிரிவாரும்;
தீதகல வோதிப் பணியாரும்-
தீநரக மீதிற் றிகழ்வாரே;
நாதவொளி யேநற் குணசீலா-
நாரியிரு வோரைப் புணர்வேலா;
சோதிசிவ ஞானக் குமரேசா-
தோமில்கதிர் காமப் பெருமாளே. (௧௧)

---

* வேரி மழை = வாசனை தங்கிய மேகம்போன்ற குழல்.

† பச்சை வேய் = பசிய மூங்கிலை யொத்த தோள்.

**429.** *முதிரு மார வார நட்பொ †டிலகு மார வார மெற்றி
முனியு மார வார முற்ற கடலாலே-
முடிவி லாத தோர்‡வ டக்கி லெரியு §மால மார்பி டத்து
முழுகி யேறி மேலெ றிக்கு நிலவாலே;
||வெதிரி லாயர் வாயில் வைத்து மதுர ராக நீடி சைக்கும்
வினைவி டாத தாய ருக்கு மழியாதே-
விளையு மோக போக முற்றி அளவி லாத காதல் பெற்ற
விகட மாதை நீய ணைக்க வரவேணும்;
கதிர காம மாந கர்க்கு ளெதிரி லாத வேல்த ரித்த
கடவு ளேக லாப சித்ர மயில்வீரா-
கயலு லாம்வி லோச னக்தி களப மார்ப யோத ரத்தி
ககன மேவு வாளொ ருத்தி மணவாளா;
அதிர வீசி யாடும் வெற்றி விடையி லேறு மீசர் கற்க
அரிய ஞான வாச கத்தை யருள்வோனே-
அகில லோக மீது சுற்றி யசுரர் லோக நீறெ ழுப்பி
அமரர் லோகம் வாழ வைத்த பெருமாளே. (௧௨)

**430.** வருபவர்க ளோலை கொண்டு நமனுடைய தூதரென்று
மடிபிடிய தாக நின்று தொடர்போது-
மயலதுபொ லாத வம்பன் விரகுடைய னேது மென்று
வசைகளுட னேதொ டர்ந்து அடைவார்கள்;
கருவியத னூடெ றிந்து சதைகள்தனை யேய ரிந்து
கரியபுன லேசொ ரிந்து விடவேதான்-
கழுமுனையி லேயி ரென்று விடுமெனும வேளை கண்டு
கடுகிவர வேணு மெந்தன் முனமேதான்;
பரகிரியு லாவு செந்தி மலையினுட னேயி டும்பன்
பழநிதனி லேயி ருந்த குமரேசா-

---

* முதிரும் மார வார நட்பொடு=மாரனுக்கு உரிமையாகிய முதிர்ந்த நட்புடன். † இலகும் ஆர் அ ஆரம் எற்றி=பிரகாசிக்கின்ற பொருந்திய அந்த முத்துக்களை எற்றி.

‡ வடக்கில் எரி=வடவாமுகாக்கினி.

§ ஆலம் ஆர்பு இடம்=கடல். || வெதிர்=வேய்ங்குழல்.

[அருக்கொணுமலை.]

பதிகள்பல வாயி ரங்கள் மலைகள் வெகு கோடி நின்ற
பதமடியர் காண வந்த கதிர்காமா;
அரவுபிறைபூளை தும்பை வில்வமொடு தூர்வைகொன்றை
யணிவர்சடை யாளர் தந்த முருகோனே-
அரகரசி வாய சம்பு குருபரகு மார நம்பு
மடியர்தமை யாள வந்த பெருமாளே.(௧௩)

## அருக்கொணுமலை.

[இது ஈழநாட்டி லுள்ளது.]

**431.** தொடுத்த வாளென விழித்து மார்முலை
யசைத்து மேகலை மறைத்து மூடிகள்
துடித்து நேர்கலை நெகிழ்த்து மாவியல்
கொளுமாதர்-
சுகித்த ஹாவென நகைத்து மேல்விழ
முடித்த வார்குழல் விரித்து மேவிதழ்
*துவர்த்த வாய்சுரு ளடக்கி மால்கொடு
வழியேபோய்ப்;
படுத்த பாயலி லணைத்து மாமுலை
பிடித்து மார்பொடு மழுத்தி வாயிதழ்
கடித்து நாணம தழித்த பாவிகள் வலையாலே-
பலித்து நோய்பிணி கிடத்து பாய்மிசை
வெளுத்து வாய்களு மலத்தி ஞெயென
பசித்து தாகமு மெடுத்தி டாவுயி ருழல்வேனோ;
வெடுத்த தாடகை சினத்தை யோர்கணை
விடுத்து யாகமும் நடத்தி யேயொரு
மிகுத்த வார்சிலை முறித்த மாயவன் மருகோனே-

* துவர்த்த=சிவந்த.

விதித்து ஞாலம தளித்த வேதனை
யதிர்த்து வோர்முடி காத்து லாயனல்
விழித்து காமனை யெரித்த தாதையர் குருநாதா;

அடுத்த ஆயிர விடப்ப ணாமுடி
நடுக்க மாமலை பிளக்க வேகவ
டாக்கர் மாமுடி பதைக்க வேபொரு மயில்வீரா-

அறத்தில் வாழுமை சிறக்க வேயறு
முகத்தி னோடணி குறத்தி யானையொ
டருக்கோ ணமலை தருக்கு லாவிய
பெருமாளே.

## திருக்கோணமலை.

[இம்மலை ஈழநாட்டி லுள்ளது. தக்ஷிண கைலாசம் எனவும் பெயர் பெறும். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய தேவாரம் பெற்றது. இதற்கு ஸ்தலபுராண முண்டு.]

**432.** விலைக்கு மேனியி லணிக்கோவை மேகலை
தரித்த வாடையு மணிப்பூணு மாகவெ
மினுக்கு மாதர்க ளிடக்காம மூழ்கியெ மயலூறி-

மிகுத்த காமிய னெனப்பாரு ளோரெதிர்
நகைக்க வேயுட லெடுத்தேவி யாகுல
வெறுப்ப தாகியெ யுழைத்தேவி டாய்படு
கொடியேனைக்;

கலக்க மாகவெ மலக்கூடி லேமிரு
பிணிக்கு ளாகியெ தவிக்காம லேயுனை
கவிக்கு ளாய்சொலி கடைத்தேற வேசெயு
மொருவாழ்வே-

கதிக்கு *நாதனி யுனைத்தேடி யேபுக
ழுரைக்கு நாயெனை யருட்பார்வை யாகவெ
கழற்கு ளாகவெ சிறப்பான தாயருள்
தரவேணும்;

* நாத னி = நாதன் நீ.

மலைக்கு நாயக சிவக்காமி நாயகர்
திருக்குமாரனெ முகத்தாறு தேசிக
வடிப்ப மாதொரு குறப்பாவை யாள்மகிழ்
தருவேளே-
வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்
அகத்ய மாமுநி யிடைக்காடர் கீரனும்
வகுத்த பாவினில் பொருட்கோல மாய்வரு
முருகோனே;
நிலைக்கு நான்மறை மகத்தான பூசுரர்
திருக்கோணமலை தலத்தாறு கோபுர
நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில்
வருவோனே-
நிகழ்த்து மேழ்பவ கடற்சூறை யாகவெ
யெடுத்த வேல்கொடு பொடித்தூளை தாளறி
நினைத்த காரிய மநுக்கூல மேபுரி பெருமானே.

௨

ஆறுவது

## பழமுதிர்சோலை.

[இது மதுரைக்கு வடக்கு 12-மைல் தூரத்திலுள்ள கள்ளழகர் கோயில் என்பார்கள். 443-ஆம் பாடலைப் பார்க்க.

"பழமுதிர்சோலை மலைகிழ வோனே" என்னும் நக்கீரர் வாக்கானும்,

"எழுமுதி ரைப்புனத் திறைவி முன்புதன்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறெனா வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்"—

என்னும் கந்தபுராணக் கடவுள் வாழ்த்துச் செய்யுளானும், இது முருகபிரான் கிழவுருக் கொடு நின்ற வள்ளிமலை யென்பாரு முளர்.]

**433.** அகரமு மாகி யதிபனு மாகி யதிகமு மாகி
அகமாகி-
அயனென வாகி அரியென வாகி அரனென வாகி
அவர்மேலாய்;
இகரமு மாகி யெவைகளு மாகி யினிமையு மாகி
வருவோனே-
இருநில மீதி லெளியனும் வாழ எனதுமு னோடி
வரவேணும்;
மகபதி யாகி மருவும்வ லாரி மகிழ்களி கூரும்
வடிவோனே-
வனமுறை வேட னருளிய பூஜை மகிழ்கதிர் காம
முடையோனே;
செககண சேகு தகுதிமி தோதி திமியென ஆடு
மயிலோனே-
திருமலி வான பழமுதிர் சோலை மலைமிசை மேவு
பெருமாளே. (க)

**434.** இலகிதழ் கோதி *நேதி மதகலை யார வார
இளநகை யாட ஆடி மிகவாதுற்-
றெதிர்பொரு கோர பார ம்ருகமத கோல கால
இணைமுலை மார்பி லேற மதராஜன்;
கலவியி லோடி நீடு வெகுவித தாக போக
காணப்ர தாப லீலை மடமாதர்-
கலவியின் மூழ்கி யாழு மிழிதொழி லேனு மீது
கருதிய ஞான போத மடைவேனோ;
கொலைபுரி காளி சூலி வயிரவி நீலி மோடி
குலிசகு டாரி யாயி மகமாயி-
குமரிவ ராகி மோகி பகவதி யாதி சோதி
குணவதி யால வூணி யபிராமி;
பலிகொள்க பாலி யோகி பரமகல் யாணி லோக
பதிவ்ரதை வேத ஞானி புதல்வோனே-
படையொடு சூரன் மாள முடுகிய சூர தீர
பழமுதிர் சோலை மேவு பெருமாளே. (உ)

---

* நேதி=நியதி.

**435.** காரணம தாக வந்து புவிமீதே-
காலனணு காதி சைந்து கதிகாண;
நாரணனும் வேதன் முன்பு தெரியாத-
ஞானநட மேபு ரிந்து வருவாயே;
ஆரமுத மான தந்தி மணவாளா-
ஆறுமுக மாறி ரண்டு விழியோனே;
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா-
சோலைமலை மேவி நின்ற பெருமாளே. (௩)

**436.** சீலமுள தாயர் தந்தை மாதுமனை யான மைந்தர்
சேருபொரு ளாசை நெஞ்சு தடுமாறித்-
திமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாமி தென்று
தேடினது போக என்று தெருவூடே;
வாலவய தான கொங்கை மேருநுத லான திங்கள்
மாதர்மய லோடு சிந்தை மெலியாமல்-
வாழுமயில் மீது வந்து தாளிணைகள் தாழு மென்றன்
மாயவினை தீர அன்பு புரிவாயே;
சேலவள நாட னங்கள் ஆரவயல் சூழு மிஞ்சி
சேணிலவு தாவ செம்பொன் மணிமேடை-
சேருமம ரேசர் தங்க ளூரிதென வாழ்வு கந்த
தீரமிகு சூரை வென்ற திறல்வீரா;
ஆலவிட மேவு கண்டர் கோலமுட னீடு மன்று
ளாடல்புரி யீசர் தந்தை களிகூர-
ஆனமொழி யேப கர்ந்து சோலைமலை மேவு கந்த
ஆதிமுத லாக வந்த பெருமாளே. (௪)

**437.** வீரமத னூல்வி ளம்பு போகமட மாதர் தங்கள்
வேல்விழியி னுன்ம யங்கி புவிமீதே-
வீசுகையி லுவி தங்கள் பேசுமவர் வாயி தஞ்சொல்
வேலைசெய்து மால்மி குந்து விரகாகிப்;
பாரவச மான வங்க ணீடுபொருள் போன பின்பு
பாதகனு மாகி நின்று பதையாமல்-

*பாகம்வர சேர அன்பு நீபமலர் சூடு தண்டை
பாதமலர் நாடி யென்று பணிவேனோ;
†பூரணம தான திங்கள் சூடுமர னாரி டங்கொள்
பூவையரு ளால்வ ளர்ந்த முருகோனே-
பூவுல கெலாம டங்க வோரடியி னால ளந்த
‡பூவைவடி வானு கந்த மருகோனே;
சூர்கிளை யேத டிந்து பாரமுடி யேய ரிந்து
தூள்கள்பட நீறு கண்ட வடிவேலா-
சோலைதனி லேப றந்து லாவுமயி லேறி வந்து
சோலைமலை மேல மர்ந்த பெருமாளே. (௫)

**438.** வீரண முகங்கி ழிந்து வீழவு மரும்ப லர்ந்து
மால்வரை யசைந்த நங்கன் முடிசாய-
வாளகிரி யண்ட ரண்ட கோளமுற நின்றெ ழுந்து
மாதவ மறந்து றந்து நிலைபேரப்;
பூரண குடங்க டிந்து சீதகள பம்பு னைந்து
பூசலை விரும்பு கொங்கை மடவார்தம்-
போக சயனந் தவிர்ந்து ஞானக பதம்ப ணிந்து
பூசனைசெய் தொண்ட னென்ப தொருநாளே;
ஆரண முழங்கு கின்ற ஆயிர மடந்த வங்கள்
ஆகுதி யிடங்கள் பொங்கு நிறைவீதி-
ஆயிர முகங்கள் கொண்ட நூபுர மிரங்கு கங்கை
யாரமர வந்த லம்பு துறைசேரத்;
தோரண மலங்கு துங்க கோபுர நெருங்கு கின்ற
சூழ்மணிபொன் மண்ட பங்கள் ரவிபோலச்-
சோதியின் மிகுந்த செம்பொன் மாளிகைவிளங்குகின்ற
சோலைமலை வந்து கந்த பெருமாளே. (௬)

---

* பாகம்=பரிபாகம் : பரிபக்குவம்

† பூரணம தான திங்கள்=என்றுந் தேயாது வளராது ஒரு தன்மையா யிருக்குந் திங்கள்,

‡ பூவை வடிவான்=காயாம்பூ வண்ண னாகிய விஷ்ணு.

**439.** ஆசை *நாலுசது ரக்கமல முற்றினொளி
வீசி யோடியிரு பக்கமொடு றச்செல்வளி
ஆவல் கூர†மண்மு தற்சலச பொற்சபையு
‡மிந்துவாகை-
ஆர§மூணுபதி யிற்கொளநி றுத்திவெளி
யாரு சோதி‖நூறு பத்தினுட னெட்டுஇத
ழாகி யேழுமள விட்டருணை விற்பதியின்
விந்துநாத;

ஓசை சாலுமொரு சத்தமதி கப்படிக
மோடு கூடியொரு மித்¶தமுத சித்தியொடு
மோது வேத0சர சத்தியடி யுற்றதிரு நந்தியூடே-
ஊமை யேனையொளிர் வித்தனது முத்திபெற
‡மூல வாசல்வெளி விட்டனது ரத்திலொளிர்
யோக பேதவகை யெட்டுமிதி லொட்டும்வகை
யின்றுதாராய்;

வாசி வாணிகனெ னக்குதிரை விற்றுமகிழ்
வாத வூரனடி மைக்கொளருக் குருபரக்கடவுள்
மாமறை ரூபன்முக **மத்திகைவி தத்தருண
செங்கையாளி-
வாகு பாதியுறை சத்திகவு ரிக்குதலை
வாயின் மாதுதுகிர் பச்சைவடி விச்சிவையென்
மாசு சேரெழுபி றப்பையும றுத்தவுமை
தந்தவாழ்வே;

* நாலு சதுரக் கமலம்=மூலாதார கமலம்.

† மண்முதற் சலசம்=சுவாதிஷ்டான முதல் ஆக்கினை ஈறாக உள்ள ஐவகைக் கமலம். ‡ இந்து வாகு=சந்திர காந்தி.

§ மூணு பதி=அக்கினியாதி மும்மண்டலம்.

‖ நூறு பத்தினுடன் எட்டு இதழ்=௧௦௦௮-இத ழுள்ள குரு கமலம். ¶ அமுத சித்தி=மதிமண்டலத்தி னின்றும் பெருகிப் பாயுங் கலா அமிர்தப் பேறு.

0 சரசத்தி அடி உற்ற திரு நந்தி=வாசி சத்திக்கு ஆதாரமாக உள்ள ஸ்ரீ நந்தி ஒளி. ‡ மூல வாசல்=பிரம ரந்திரம்.

** மத்திகை=குதிரைச் சம்மட்டி.

காசி ராமெசுரம் ரத்நகிரி சர்ப்பகிரி
ஆரூர் வேலூர்*தெவுர் கச்சிமது ரைப்பதியல்
காவை மூதூரரு ணக்கிரிதி ருத்தணியல்
செந்தில்நாகை-
காழி வேளூர்பழ நிக்கிரிகு றுக்கைதிரு
நாவ லூர்திருவெ ணெய்ப்பதியின் மிக்கதிகழ்
காதல் சோலைவளர் வெற்பிலுறை முத்தர்புகழ்
தம்பிரானே. (எ)

இதன் முற்பாதியின் சுருக்கப் பொழிப்பு.

இடைகலை பிங்கலை என்னும் இருநாடிமார்க்கமாக ஓடிக் கழியும் பிராணவாயுவை மூலாதாரத்தி லூன்றி, அங்கிருந்து சுழுமுனை நாடி மார்க்கமாக மற்றை ஆதார கமலங்களிலும் ஓட்டி நிறுத்தி, அப்பால் ௬௦௦அ - இதழோடுங் கூடிய குருகமலத்திற் செலுத்தி, அங்கு நாதவோசையும் மதிக்கலாமிர்தமும் பொங்கி யெழ அவற்றோடு கூடி ஒருமிக்கச்செய்து, சரசத்திக்கு ஆதாரமாக வுற்ற ஸ்ரீ நந்தியொளியையும் ஊமையேனுக்குத் தெரிசிப்பித்து, உனது முத்திபெற மூலவாசல் வெளிவிட்டு, இங்ஙனஞ் செய்வதில் அஷ்டாங்கயோகமும் பொருந்தும் வகைமையை இன்று தந்தருள்வேண்டும்.

---

**440.** கருவாகியெ தாயுத ரத்தினி
லுருவாகவெ கால்கையு றுப்பொடு
கனிவாய்விழி நாசியு டற்செவி †நரைமாதர்-
கையிலேவிழ வேகிய ணைத்துயி
லெனவேமிக மீதுது யிற்றிய
கருதாய்முலை யாரமு தத்தினி லினிதாகித்;
தருதாரமு மாகிய சுற்றமு
நலவாழ்வுநி லாதபொ ருட்பதி
சதமாமிது தானென வுற்றுனை நினையாத-
சதுராயுன தாளிணை யைத்தொழ
அறியாதநிர் மூடனை நிற்புகழ்
தனையோதிமெய்ஞ் ஞானமுறச்செய்வ
தொருநாளே;

---

* தெவுர்=தேவூர். † நரை மாதர்=மருத்துவச்சிகள்.

செருவாயெதி ராமசு ரத்திரள்
தலைமூளைக ளோடுநி ணத்தசை
திமிர்தாதுளை பூதக ணத்தொடு வருபேய்கள்-
திருதாவுண வாயுதி ரத்தினை
பலவாய்நரி யோடுகு டித்திட
சிலகூகைகள் தாமுந டித்திட அடுதீரா;
அருமாமறை யோர்கள்து தித்திடு
புகர்வாரண மாதுத னைத்திக
ழளிசேர்குழல் மேவுகு றத்தியை அணைவோனே-
அழகானபொன் மேடையு யர்த்திடு
முகில்தாவிய சோலைவி யப்புறு
அலையாமலை மேவிய பத்தர்கள் பெருமாளே.(அ)

**441.** சீர்சி றக்கு மேனி பசேல் பசே லென
நூபு ரத்தி ளோசை கலீர் கலீ ரென
சேர விட்ட தாள்கள் சிவேல் சிவே லென
வருமாதர்-
சேக ரத்தின்*வாலை சிலோர் சிலோர் களு
நூறு லக்ஷ கோடி மயால் மயால் கொடு
தேடி யொக்க வாடி யையோ வையோ வென
மடமாதர்;
மார்ப டைத்த கோடு பளீர் பளீ ரென
ஏம வித்தை ஞாயி பகீர் பகீ ரென
மாம சக்கி லாசை யுளோ முளோ மென
நினைவோடி-
வாடை பற்று வேளை அடா அடா என
நீம யக்க மேது சொலாய் சொலா யென
வாரம் வைத்த பாத மிதோ இதோ என
அருள்வாயே;

---

* வாலை = கட்டிளமைப்பருவம்.

பார தத்தை மேரு வெளீ வெளீ திகழ்
கோடோ டித்த நாளில் வரைஇ வரைஇ பவர்
*பானி றக்க ணேசர் குவா குவா கனர்
இளையோனே-
பாடன் முக்ய மாது தமீழ் தமீ ழிறை
மாமு நிக்கு காதி லுணூர் வுணூர் விடு
பாச மற்ற வேத குரூ குரூ பர குமரேசா;
போர்மி குத்த சூரன் விடோம் விடோ மென
நேரே திர்க்க வேலை படீர் படீரென
போய றுத்தபோது குபீர் குபீ ரென
வெகுசோரி-
பூமி†யுக்க வீசு குகா குகா திகழ்
சோலைவெற்பின்மேவு தெய்வாதெய்வானை‡தொள்
பூணி யிச்சை யாறு புயா புயா றுள
பெருமாளே. (௯)

**442.** துடிகொ ணோய்க ளோடு வற்றி
தருண மேனி கோழை துற்ற
இருமல் வீளை வாத பித்த மணுகாமல்-
துறைக ளோடு வாழ்வு விட்டு
உலக நூல்கள் வாதை யற்று
சுகமு ளாறு பூதி பெற்று மகிழாமே;
உடல்செய் கோர பாழ்வ யிற்றை
நிதமு மூணி னூலு யர்த்தி
யுயிரி னீடு யோக சித்தி பெறலாமே-
உருவி லாத பாழில் வெட்ட
வெளியி லாடு நாத நிர்த்த
உனது ஞான பாத பத்ம முறுவேனோ;
கடிது லாவு வாயு பெற்ற
மகனும் வாலி சேயு மிக்க
மலைகள் போட ஆழி கட்டி யிகலூர்போய்;

* பானு நிறம்=சூரியனைப்போற் சிவந்த நிறம்.
† உக்க=சிந்த. ‡ தொள்=தோள்.

களமு ருவை தேர்நு றுக்கி
தலைக ளாறு நாலு பெற்ற
அவனை வாளி யால டத்தன் மருகோனே;
முடுகு வீர சூர பத்மர்
தலையின் மூளை நீறு பட்டு
முடிவ தாக ஆடு நிர்த்த மயில்வீரா—
முநிவர் தேவர் ஞான முற்ற
புநித சோலை மாம லைக்குள்
முருக வேல த்யாகர் பெற்ற பெருமாளே.

**443.** **பா**சத் தால்விலை கட்டிய பொட்டிகள்
நேசித் தாரவர் சித்தம ருட்டிகள்
பாரப் பூதர மொத்தத னத்திகள் மிகவேதான்-
பாவத் தால்மெயெ டுத்திடு பட்டிகள்
சீவிக் கோதிமு டித்தள கத்திகள்
பார்வைக் கேமய லைத்தரு துட்டிக ளொழியாத;
மாசுற் றேறிய பித்தளை யிற்பணி
நீறிட் டேயொளி பற்றவி ளக்கிகள்
மார்பிற் காதினி லிட்ட பிலுக்கிகள் அதிமோக-
வாய்வித் தாரமு ரைக்கும பத்திகள்
நேசித் தாரையு மெத்திவ டிப்பவர்
மாயைக் கேமனம் வைத்தத ளுட்டின
மலைவேனோ;
தேசிக் கானக முற்றதி னைப்புன
மேவிக் காவல்க வட்கல்சு ழற்றுவள்
சீதப் பாதகு றப்பெண்ம கிழ்ச்சிகொள் மணவாளா-
தேடிப் பாடிய சொற்புல வர்க்கித
மாகத் தூதுசெ லத்தரில் கற்பக
தேவர்க் காதிரு ப்புக லிப்பதி வருவோனே;
ஆசித் தார்மன திற்புகு முத்தம
கூடற் கேவைகை யிற்கரை கட்டிட
ஆளாப் பாயுதிர் பிட்டமு தக்கடி படுவோனே-

டாரத் தோடகி லுற்றத ருக்குல
மேகத் தோடொரு மித்துநெ ருக்கிய
ஆதிச் சோலைம லைப்பதி யிற்றிகழ் பெருமாளே.

**444.** **வா**தினை யடர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயம தொழிந்து தெளியேனே-
மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபத மணிந்து பணியேனே;
ஆதியொடு மந்த மாகிய நலங்கள்
ஆறுமுக மென்று தெரியேனே-
ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடுமயி லென்ப தறியேனே;
நாதமொடு விந்து வானவுடல் கொண்டு
நானில மலைந்து திரிவேனே-
நாகமணி கின்ற நாதநிலை கண்டு
நாடியதில் நின்று தொழுகேனே;
சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற
*சோகமது தந்து எனையாள்வாய்-
சூரர்குலம் வென்று வாகையொடு சென்று
சோலைமலை நின்ற பெருமாளே. (கஉ)

**445.** **வா**ர்குழையை யெட்டி வேளினைம ருட்டி
மாயநம னுக்கு முறவாகி-
மாதவம ழித்து லீலைகள் மிகுத்து
மாவடுவை யொத்த விழிமாதர்;
சீருட னழைத்து வாய்கனிவு வைத்து
தேனித ழளித்து அநுபோக-
சேர்வைதனை யுற்று மோசம்விளை வித்து
சீர்மைகெட வைப்ப துறவாமோ;
வாரினை யறுத்து மேருவை மறித்து
மாகனக மொத்த குடமாகி-

* சோகம்=(ஸா+அகம்) அது நான்.

வாரவணை வைத்து மாலளித முற்று
மாலைகளு மொய்த்த தனமாது;
தோரணி புயத்தி யோகினி சமர்த்தி
தோகையுமை பெற்ற புதல்வோனே-
சூர்கிளை மடித்து வேல்கர மெடுத்து
சோலைமலை யுற்ற பெருமாளே. (௩௩)

**446.** அழகு தவழ்குழல் விரித்துக் காட்டி
விழிகள் கடையிணை புரட்டிக் காட்டி
அணிபொ னணிகுழை புரித்துக் காட்டி யநுராக-
அவச இதமொழி படித்துக் காட்டி
அதர மழிதுவர் வெளுப்பைக் காட்டி
அமர்செய் நகநுதி யழுத்தைக் காட்டி
யணியாரம்;

ஒழுகு மிருதன மசைத்துக் காட்டி
எழுத வரியிடை வளைத்துக் காட்டி
யுலவுமுடைதனைநெகிழ்த்திக்காட்டி யுறவாடி-
உருகு கடிதட மொளித்துக் காட்டி
உபய பரிபுர பதத்தைக் காட்டி
யுயிரை விலைகொளு மவர்க்குத் தேட்ட
மொழிவேனோ;

முழுகு மருமறை முகத்துப் பாட்டி
கொழுநர் குடுமியை யறுத்துப் போட்ட
முதல்வ குகைபடு திருப்பொற் கோட்டு
முனிநாடா—
முடுகு முதலையை வரித்துக் கோட்டி
அடியர் தொழுமக வழைத்துக் கூட்டி
முறைசெய் தமிழினை விரித்துக் கேட்ட
முதுநீதர்;

பழய கடதட முகத்துக் கோட்டு
வழுவை யுரியணி மறைச்சொற் கூட்டு
பமர் பகிரதி சடைக்குட் சூட்டு பரமேசர்-

பணிய அருள்சிவ மயத்தைக் காட்டு
குமர *குலமலை யுயர்த்திக் காட்டு
பரிவொ டணிமயில் நடத்திக் காட்டு
பெருமாளே. (௧௪)

**447.** தலைமயிர் கொக்குக் கொக்கந ரைத்துக்
கலகலெ னப்பற் கட்டது விட்டுத்
தளர்நடை பட்டுத் தத்தடி யிட்டுத் தடுமாறித்-
தடிகொடு தத்திக் கக்கல்பெ ருத்திட்
டசனமும் விக்கிச் †சத்தியெ டுத்துச்
சளியுமி குத்துப் பித்தமு முற்றிப் பலகாலும்;
திலதயி லத்திட் டொக்கவெ ரிக்கத்
திரிபலை சுக்குத் திப்பிலி யிட்டுத்
தெளியவ டித்துற் றுய்த்துடல் செத்திட்
டுயிர்போமுன்-
திகழ்புகழ் கற்றுச் சொற்கள்ப யிற்றித்
திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்
செனனம றுக்கைக் குப்பர முத்திக்
கருள்தாராய்;
கலைமலி சித்துப் பக்கரை யிட்டுப்
புரவிசெ லுத்திக் ‡கைக்கொடு வெற்பைக்
கடுகந டத்தித் திட்டென எட்டிப் பொருசூரன்-
கனபடை கெட்டுத் தட்டற விட்டுத்
திரைகட லுக்குட் புக்கிட எற்றிக்
களிமயி லைச்சித் ரத்தில்ந டத்திப்
பொருகோவே;
குலிசன்ம கட்குத் தப்பியு மற்றக்
குறவர்ம கட்குச் சித்தமும் வைத்துக்
குளிர்தினை மெத்தத் தத்துபு னத்திற் றிரிவோனே-

* குலமலை என்பது சோலைமலை. † சத்தி=கக்கல்.

‡ கைக்கொடு வெற்பை=கையை யுடைய கொடிய மலையை யொத்த யானையை.

கொடியபொ ருப்பைக் குத்திமு றித்துச்
சமரம்வி ளைத்துத் தற்பர முற்றுக்
தூலகிரி யிற்புக் குற்றுறை யுக்ரப் பெருமானே. ()

**448.** மலரணை ததும்ப மேக குழல்முடி சரிந்து வீழ
மணபரி மளங்கள் வேர்வை யதனோடே-
வழிபட விடங்க ளூடை பிறைநுதல் புரண்டு மாழ்க
வளைகலை நெகிழ்ந்து போக இளநீரின்;
முலையிணை ததும்ப நாலின் வகிரிடை சுழன்று வாட
முகமுகமொ டொன்ற பாய லதனூடே-
முதுமயல் கலந்து மூழ்கி மகிழ்கினும் உலங்க லாடு
முடிவடிவொ டங்கை வேலு மறவேனே;
சிலைநுத லிராம்பெண் மோகி சடையழகி யெந்தை பாகி
திகழ்மர கதம்பொன் மேனி புமைபாலா-
சிறுநகை புரிந்து சூரர் கிரிகட லெரிந்து போக
திகழுயி லெறிந்த ஞான முருகோனே;
கொலைமிக பயின்ற வேடர் மகள்வளி மணந்த தோள
குணவலர் கடம்ப மாலை பணிமார்பா-
கொடிமின லடைந்த சோதி மழகதிர் தவழ்ந்த ஞான
தூலகிரி மகிழ்ந்து மேவு பெருமானே. (கசு)

## ஆறு திருப்பதி.

**449.** அலைகடல் நிகராகிய விழிதொடு வலைவீசிகள்
*அபகட மகபாவிகள் விரகாலே-
அதிவித மதரா†யத நிதமொழி பலகூறிகள்
அசடரொ டுறவாடிகள் அநியாயக்;
கலைபகர் விலைமாதர்கள் இளைஞர்கள் குடிகேடிகள்
கருதிடு கொடியாருட னினிதாகக்-
கனதன முலைமேல்விழு கபடனை நிருமூடனை
கழலிணை பெறவேயினி யருள்வாயே;

---

* அபகடம்=வஞ்சகம். † அதநித=அத அநீத; அதம்=தாழ்வு.

அலைபுனல் தலைசூடிய பசுபதி மகனாகிய
அறுமுக வடிவேஅருள் குருநாதா-
அசுரர்கள் குடியேகெட அமரர்கள் பதியேபெற
அதிரிடும் வடிவேல்விடு மதிசூரா;
தலையய னறியாவொரு சிவகுரு பரனேயென
தரணியி லடியார்கண நினைவாகா-
*சகலமு முதலாகிய அறுபதி நிலைமேவிய
கடமயில் தனிலேறிய பெருமாளே. (க)

**450.** ஈனமிகுத் துளபிறவி யணுகாதே-
யானுமுனக் கடிமையென வகையாக;
ஞானஅருட் டனையருளி வினைதீர-
நாணமகற் றியகருணை புரிவாயே;
†தானதவத் தினின்மிகுதி பெறுவோனே-
‡சாரதியுத் தமிதுணைவ முருகோனே;
ஆனதிருப் பதிகமரு ளிளையோனே-
ஆறுதிருப் பதியில்வளர் பெருமாளே. (உ)

---

* சகலமு முதலாகிய அறு பதி = சகல தலங்களுக்கும் முதன்மையாக வுள்ள திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழநி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் ஆறு படை வீடுகள்.

† தான தவத்தினில் = தன்னைக் குறித்து அன்பர்கள் செய்யுந் தானத்திலுந் தவத்திலும்.

‡ சாரதி உத்தமி துணைவன் = சரஸ்வதியாகிய உத்தமிக்குப் பக்கத் துணையாக இருப்பவன்; சகோதர முறை யுடையவன் எனினு மாம்.

வேலு மயிலுந் துணை.

# பாட்டு முதற்குறிப் பகராதி.

உடுக்குறி [*] யுற்றன புதிய பாடல்கள்.

| முதற்குறிப்பு. | பாட்டின் எண். | பக்க எண். | முதற்குறிப்பு. | பாட்டின் எண். | பக்க எண். |
|---|---|---|---|---|---|
| அகத்திணைக் | 324 | ௨௩0 | அல்லலைலடைந்த | 320 | ௨௩௭ |
| *அகரமுமாகி | 433 | ௪௨௮ | அல்லிவிழி | 313 | ௨௩௧ |
| அகல்வினை | 156 | ௧௨௫ | அல்லினேருமின் | 417 | ௩௧௭ |
| அங்கைசீட்டி | 329 | ௨௩௪ | அவனிதனி | 138 | ௧௧௧ |
| அங்கைமென்குழ | 46 | ௩௯ | அவனிபெயும் | 24 | ௨௫ |
| அணிபட் | 124 | ௯௯ | அவாமரு | 207 | ௧௬0 |
| அதலவிதலமுத | 157 | ௧௨௬ | அழகுதவழ்குழல் | 446 | ௩௩௭ |
| அதிருங்கழல் | 233 | ௧௭௭ | அழகெறிந்த | 405 | ௩0௭ |
| அத்தவேட்கைப் | 383 | ௨௮௯ | அழுதமுதாசார | 332 | ௨௪௬ |
| *அத்துகிரினலத | 382 | ௨௮௮ | அளகபார | 22 | ௨௪ |
| அந்தகன்வரு | 47 | ௩௪ | அறமிலா | 160 | ௧௨௮ |
| அந்தோமனமே | 330 | ௨௩௫ | அறிவழிய | 49 | ௪௬ |
| அபகார | 106 | ௮௫ | அனங்க னம்பொன் | 403 | ௩0௫ |
| அமுதுகதி | 17 | ௧௯ | அனிச்சங் | 26 | ௨௭ |
| அமைவுற் | 249 | ௧௮௮ | அனைவரு | 50 | ௪௬ |
| அம்பொத்தவிழி | 19 | ௨௨ | அன்பாக | 367 | ௨௭௬ |
| ஆரகாசிவனரி | 270 | ௨0௨ | | | |
| அரிசனவாடை | 158 | ௧௨௬ | | | |
| *அரிவையர்கள் | 400 | ௩0௯ | ஆசைசா லு | 439 | ௩௩௧ |
| அரிவையர் நெஞ்சுரு | 331 | ௨௩௬ | ஆதாளிகள்புரி | 118 | ௯௫ |
| அருக்கிமெத் | 252 | ௧௯0 | ஆதிமகமாயி | 393 | ௨௯௭ |
| அருக்குமங்கையர் | 4 | ௯ | ஆலகாலபடப்பை | 379 | ௨௮௬ |
| அருணமணி | 48 | ௩௫ | ஆலகாலமெனக் | 152 | ௧௨௧ |
| அருத்தி | 159 | ௧௨௭ | ஆறுமுகம் | 161 | ௧௨௮ |
| அலகின்மாறு | 419 | ௩௧௮ | ஆனனமுகந்து | 208 | ௧௬௧ |
| அலைகடல் | 449 | ௩௩௯ | ஆனந்தபிருதிவிப் | 209 | ௧௬௧ |

| முதற்குறிப்பு. | பாட்டின் எண். | பக்க எண். | முதற்குறிப்பு. | பாட்டின் எண். | பக்க எண். |
|---|---|---|---|---|---|
| குரம்பைமலசலம் | 113 | அகூ | சகடத்திற் | 154 | கஉஉ |
| *குருதிமலசல | 176 | ககூ | சங்குபோல் | 37 | கூரு |
| குருவியெனப்பல | 285 | உகக | சங்கைதா | 36 | கூரு |
| குலைத்துமயிர்க் | 286 | உகஉ | சத்தமிகு | 39 | கூஅ |
| குவளைக்கணை | 250 | கஅகூ | சத்திபாணீ | 338 | உ௫0 |
| குவளைபூசல் | 337 | உசகூ | சந்ததம் பந்த | 210 | கசு |
| குழலடவிமுகில் | 177 | ககூகூ | சந்தனசவாது | 40 | கூஅ |
| குழைக்குஞ்சந் | 31 | கூக | சமரமுக | 423 | கூஉ0 |
| குறித்தமணிப் | 135 | க0அ | சரணகம | 214 | ககூ௫ |
| குன்றுங்குன்றுஞ் | 115 | கூரு | சாத்தேயுதிக்தரப் | 424 | கூஉக |
| | | | சரவணஜாதா | 366 | உஎ௫ |
| கூந்தலவிழ்ந்து | 287 | உககூ | சரியையாளர்க்கு | 425 | கூஉஉ |
| கூர்வேல்பழித்த | 288 | உகசு | சருவும்படி | 3 | அ |
| கைத்தல | ... | க | சாந்தமில் | 247 | கஅரு |
| கையொத்து | 315 | உகூஉ | | | |
| | | | சிந்துரகூர | 178 | கசு0 |
| கொங்கைகள் | 65 | ௫௫ | சிரமங்க | 322 | உகூஅ |
| கொங்கைப் | 20 | உஉ | சிவனார் | 109 | அரு |
| *கொடாதவனை | 361 | உஎக | சிறுபறையு | 147 | கககூ |
| கொடியமறலியு | 387 | உகூரு | சினத்தவர் | 263 | கககூ |
| கொடியனைய | 18 | உக | சினத்திலத்தினை | 266 | கககூஅ |
| கொண்டாடிக் | 397 | கூ00 | | | |
| கொந்துத் தருகுழ | 151 | கஉ0 | சீயுதிரமெங்கு | 120 | கூரு |
| கொந்துவார்குர | 289 | உக௫ | சீரானகோலகால | 350 | உ௫க |
| கொம்பனையார் | 66 | ௫கூ | சீர்சிறக்குமேனி | 441 | கூகூகூ |
| கொலைகொண்ட | 328 | உசகூ | சீலமுள | 436 | கூஉகூ |
| கொலைமதகரியன | 67 | ௫எ | சீறலசடன் வினை | 121 | கஎ |
| கோங்கமுகையு | 416 | கூககூ | சுத்திய நாப்படனெ | 215 | ககூகூ |
| கோங்கிளநீரிளக | 246 | கஅரு | சுருதிமுடி | 148 | ககஎ |
| கோதிமுடித்துக் | 394 | உகூஎ | சுருளளக | 141 | ககஉ |
| கோமளவெற்பி | 197 | க௫சு | *சுற்றகப | 348 | உ௫எ |
| கோலகுங்கும | 105 | அசு | | | |
| கோலமதிவதனம் | 119 | கூ௫ | சூதுகொலைகார | 391 | உகூ௫ |

| முதற்குறிப்பு. | பாட்டின் எண். | பக்க எண். | முதற்குறிப்பு. | பாட்டின் எண். | பக்க எண். |
|---|---|---|---|---|---|
| வண்டார்மதங்க | 369 | ௨௭௭ | விடமடைசு | ... | ௩ |
| வந்துவந்துமுந்த | 96 | ௭௭ | விடமும்வடி | 231 | ௧௭௫ |
| வரதாமணிநீ | 192 | ௧௫௦ | விதமிசைந்தினி | 194 | ௧௫௧ |
| வரிக்கலையி | 310 | ௨௨௯ | விதிபோலுமுந்த | 44 | ௪௨ |
| வரிசேர்ந்திடு | 248 | ௧௮௭ | விநததினூறி | 98 | ௭௮ |
| வரியார்கருங்கண் | 97 | ௭௮ | விரித்தலைபங்குழ | 232 | ௧௭௬ |
| வருத்தங்காண | 378 | ௨௮௫ | விரைமருவு | 144 | ௧௧௩ |
| வருபவர்கள் | 430 | ௩௨௬ | விலைக்குமேனியி | 432 | ௩௨௬ |
| வரைத்தடங் | 15 | ௧௭ | விழியால்மருட்டி | 204 | ௧௫௮ |
| வரைவில்பொய் | 323 | ௨௩௯ | விறன்மாரனைந்து | 45 | ௪௩ |
| *வனிதையுடல் | 142 | ௧௧௨ | வினைக்கினமாகு | 259 | ௧௯௪ |
| வாசித்துக் | 343 | ௨௫௩ | வீரமத | 437 | ௩௨௯ |
| வாதம்பித்தமிடா | 193 | ௧௫௦ | | | |
| வாதமொடு | 228 | ௧௭௩ | வெங்காளம்பா | 43 | ௪௧ |
| வாதினையடர்ந்த | 444 | ௩௩௬ | வெஞ்சரோருக | 99 | ௭௯ |
| வாரணந்தனை | 102 | ௮௨ | வெடித்தவார்குழ | 413 | ௩௧௪ |
| வாரணமுகவ | 438 | ௩௩௦ | வெருட்டி | 344 | ௨௫௪ |
| வாரமுறற | 229 | ௧௭௪ | வெலலிக்குயீக்கு | 318 | ௨௩௪ |
| வாருற்றெழு | 311 | ௨௨௯ | வெற்றிசெய | 312 | ௨௩௦ |
| வார்குழலைச் | 198 | ௧௫௫ | | | |
| வார்குழல்விரித் | 230 | ௧௭௪ | வேதவெற்பி | 327 | ௨௪௨ |
| வார்குழையை | 445 | ௩௩௬ | வேயிசைசொதெழு | 104 | ௮௩ |



P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS